# தர்க்க கௌமுதி

பதிப்பாசிரியர் :
கலாநிதி சோ. கிருஷ்ணராஜா

ஆலயமணி வெளியீடு
1990

# தர்க்க கௌமுதி

பதிப்பாசிரியர்:
கலாநிதி சோ. கிருஷ்ணராஜா
மெய்யியற்றுறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

ஆலயமணி வெளியீடு
28, குமாரசாமி வீதி,
கந்தர்மடம்,
யாழ்ப்பாணம்,
1990-3-30

| | |
|---|---|
| *Title:* | Tarka Kaumudi |
| *Language:* | Tamil |
| *Subject:* | Indian Logic / Philosophy |
| *Edited by:* | Dr. S. Krishnarajah |
| *Address:* | Dept. of Philosophy,<br>University of Jaffna,<br>Jaffna, Sri Lanka. |
| *Publisher:* | "Alayamani" |
| *Date of Publication:* | 1990-03-30 |
| *Address:* | Pulavar Eelathu Sivananthan,<br>No 28, Kumarasamy Rd,<br>Kantharmadam, Jaffna. |
| *Printer:* | Siri Lanka Press,<br>No. 234A, K. K. S. Rd,<br>Jaffna. |

பொருளடக்கம்

வெளியீட்டுரை

எங்கள் குல முதல்வியான அன்னை சிவக்கொழுந்து சண்முகநாதன் அவர்கள் சுற்றம் தழுவிய பெருந்தகையாளர். அன்பு, ஆதரவு அரவணைப்புக்களால் எங்கள் குடும்பத்தின் கலங்கரை விளக்காய் பிரகாசித்தவர். இந்த வெளிச்ச வீட்டினை நோக்கிய எந்தக் கப்பலும் திசைமாறவில்லை, திகைக்கவில்லை. இன்றும் இந்த வெளிச்சத்தின் பிரகாசிப்பில் பயணம் செய்யும் படகுகள் உணர்வலைகளின் நன்றி மகிழ்வில் மிதக்கின்றன.

அன்னை அவர்களின் பூரணமான இயற்கைப்பேறு குறித்த நினைவுச் சொல்வெட்டோடு உயர்கல்வி பயிலும் மாணவர்களுக்கு பயன்படும்வகையில் ஒரு வெளியீட்டினை; அன்னையின் நினைவாகக் கொண்டுவர வேண்டும் என்ற விருப்பம் அவர்களின் சகோதரங்களும் எங்கள் குடும்பத்தின் பெருந்தலைவர்களுமான திருவாளர்கள் ந. ஆ. அம்பலவாணர், ந. ஆ. வயித்திலிங்கம் ஆகியோருக்கு உண்டாகியது. எம்மோடு ஆலோசித்தனர்.

ஆலயமணி இதழை ஆரம்பித்து நடாத்தத் தொடங்கிய காலத்தில் பல்கலைக்கழக மாணவர்களுக்கும், பிறருக்கும் உதவக்கூடிய நூல்களை வெளியிடவும் முயற்சிகள் எடுக்கப்பட வேண்டுமென்று யாழ்ப்பாணப் பல்கலைக்கழக மெய்யியற்றுறை விரிவுரையாளர் நண்பர் கலாநிதி சோ. கிருஷ்ணராஜா கூறியிருந்தமை நினைவுக்கு வந்தது. வரவே இந்தத் தர்க்க கௌமுதியை சிபார்சு செய்தேன். அன்னையின் சகோதரர்களும் என் அண்ணன்மாரும் இதனை வெளியிடச் சம்மதம் தெரிவித்தனர். இன்று இது ஆலயமணி

யின் முதல் வெளியீடாக வருவது குறித்து மகிழ்ச்சி யடைகின்றேன். இதற்கு வேண்டிய வேலைகளைச் செய்ததோடு பதிப்பாசிரியர் பொறுப்பையும் ஏற்று உதவிய கலாநிதி சோ. கிருஷ்ணராஜாவுக்கும், இந் நூல் வெளியிடும் செலவை ஏற்ற ந. ஆ. அம்பல வாணர், ந. ஆ. வயித்திலிங்கம் அவர்களுக்கும் ஆலய மணியின் நன்றி உரியதாகிறது.

''போதொடு நீர் சுமந்து ஏத்தி
புகுவார் அவர்பின் புகுவேன்''

'ஆலயமணி' — ஈழத்துச்சிவானந்தன்

தமிழில் தருக்க நூற்கருத்துக்களைத் தொகுத்துத் தரும் நூல்களில் காலத்தால் முந்தியது மணிமேகலை. தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதையில் பௌத்த தரிசனத்திற்குரிய தருக்கக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. சிவஞான சித்தியார் சுபக்கத்தி லுள்ள அளவையிலக்கணம் கூறும் பதின்மூன்று பாடல் களும் சைவசித்தாந்த மரபிற்குரிய தருக்கக் கருத்துக் களைக் கூறுகிறது. பௌஷ்கர ஆகமத்தின் பிரமாண படலத்தில் வரும் தருக்கக் கருத்துக்களும் சைவசித் தாந்தத்தில் ஆர்வமுடையவர்களிற்கு மிகவும் பயன் படும்.

வடமொழியிலிருந்து தமிழிற்கு மொழி பெயர்க்கப் பட்ட தருக்க நூல்களில் காலத்தால் மூந்தியது தருக்க பாஷை, அது துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகளி னால் மொழி பெயர்க்கப்பட்டது[1]. 17ம் நூற்றாண்டிற் குரியது. இதன்பின்னரே அன்னம்பட்டரின் தருக்க சங் கிரகமும், தருக்க சங்கிரக தீபிகையும் சிவஞானசுவாமி களால் மொழி பெயர்க்கப்பட்டது[2]. சிவஞான முனிவ ரது மொழி பெயர்ப்பு செம்மையானதல்ல எனக் குறிப் பிடும் தெல்லிப்பழை சிவாநந்தையர், தருக்க சங்கிர கத்தையும் அதன் உரைகளாகிய நியாய போதினி, பதகிருத்தியம், அன்னம்பட்டீயம், நீலகண்டீயம் என் பனவற்றையும் இணைத்து 1910ல் மொழி பெயர்த்துப் பதிப்பித்தார்[3].

---

1. தர்க்க பாஷை, பதிப்பாசிரியர் கலாநிதி சோ. கிருஷ்ணராஜா, யாழ்ப்பாணம், 1988.
2. தருக்க சங்கிரகம், ஆறுமுகநாவலர் பதிப்பு, 7ம் பதிப்பு, சென்னை. 1929.
3. தருக்க சங்கிரகம், நியாயபோதினி, பதகிருத்தியம், அன்னம்பட்டீயம், நீலகண்டீயம், தெல்லிப்பழை சிவாநந்தையர், கொக்குவில் 1920.

இவை தவிர விருத்திப் பிரபாகம், விருத்திரத்நாவலி, நியாயப் பிரகாசம் என்பனவும் தமிழில் வெளிவந்த தருக்க நூல்களில் குறிப்பிடத் தக்கவை. விருத்திப் பிரபாகம் வெளிவந்த ஆண்டு தெரியவில்லை. விருத்திரத்நாவலி 1902ல் குப்புஸ்வாமிராஜா என்பவரால் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டது[4]. இவ்விரு நூல்களும் வேதாந்த தரிசனத்திற்குரிய தருக்கநூற் கருத்துக்களைக் கூறுவன. நியாயப் பிரகாசம் நாகரத்தினநாயகரால் மொழிபெயர்க்கப்பட்டு 1907ல் வெளியிடப்பட்டது[5]. ஹிந்தி மூல நூலாசிரியர் பெயர் சித்கநாநந்தகிரி. இது வைஷேஷிக தரிசனத்திற்குரிய தருக்க நூலாகும்.

தர்க்க கௌமுதி என்ற இந்நூலின் ஆசிரியர் லோகாக்ஷி பாஸ்கரர், 17ம் நூற்றுண்டில் காசியில் வாழ்ந்தவர். இந்நூல் வெ. குப்புஸ்வாமிராஜா என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டு கோவிந்தன் என்பவரால் மதராஸ் ரிப்பன் அச்சுயந்திரசாலையில் 1890ம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. சரியாக ஒருநூற்றுண்டு காலத்திற்குப் பின் இந்நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. இப்பதிப்பு மூலநூலுடன் சரிபார்க்கப்பட்டுள்ளது. பதிப்பாசிரியர் குறிப்புக்களும் விளக்கங்களும் அடைப்புக் குறியுள் தரப்பட்டுள்ளது.

இந்நூலில் ஏழுவகைப் பதார்த்தங்களின் இயல்பு, பிரத்தியட்சம், அனுமானம் என்பன ஆராயப்பட்டுள்ளன. புத்தி அல்லது அறிவு ஆன்மாவின் பண்பாக எடுத்துக் காட்டப்படுகிறது. அறிவு; அனுபவம், ஸ்மிருதி அல்லது நினைவு என இருவகைப்படும். அனு

---

4. ஸ்ரீ விருத்தி ரத்நாவலி, வெ. குப்புஸ்வாமிராஜா, சென்னை 1902.

5. நியாயப் பிரகாசம், பு. நாகரத்தினநாயகர். சென்னை 1907.

பவம்; உண்மையனுபவம், இன்மையனுபவம் என மேலும் இரண்டாகப் பிரிக்கப்படும். காட்சியும், அநுமானமும் உண்மையனுபவத்தின் இயல்பாக இந் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கிடைத்தற்கரியதாயுள்ள தருக்க நூல்களைப் பதிப்பித்தல் என்ற திட்டத்தின்படி முதலில் தர்க்கபாஷை மூன்றும் பதிப்பாக 1988ல் எம்மால் வெளியிடப்பட்டது. தொடர்ந்து தர்க்க கௌமுதி என்ற இந்நூல் தமிழ் — ஆங்கில கலைச்சொல் இணைப்புடன் வெளியிடப்படுகிறது.

இந்நூல் திருமதி சிவக்கொழுந்து சண்முகநாதன் அவர்களின் நினைவாக அவருடைய சகோதரர்களான ந. ஆ. அம்பலவாணர், ந. ஆ. வைத்திலிங்கம் ஆகியோரின் உதவியுடன் புலவர் ஈழத்துச் சிவானந்தனின் ஆலயமணி வெளியீடாக வெளிவருகிறது. இந்திய தருக்கநூற் கல்விக்குப் பெரிதும் பயன்படும் இந்நூலை வெளியிடக் காலாயமைந்தவர்கள் அனைவர்க்கும் பதிப்பாசிரியனின் நன்றி.

1990-02-02 கலாநிதி சோ. கிருஷ்ணராஜா

# சுற்றந் தழுவிய கொழுந்து



நரசிங்க முதலியார் பிரபுவின் மைத்துனர்
முத்துக்குமாரு உடையார் பூட்டி
**திருமதி**
**சிவக்கொழுந்து சண்முகநாதன் அவர்கள்**
புங்குடுதீவு.

1. பதார்த்தம்:- பதார்த்தங்கள் அபிதேயம் எனப் பெயரிட்டு வழங்கப்படும். அவை திரவியம் (பொருள்), குணம் (பண்பு), கருமம் (தொழில்), சமானியம் (பொதுமை), விசேடம் (சிறப்பு), சமவாயம் (ஒற்றுமைச் சம்பந்தம்), அபாவம் (இன்மை) என ஏழாகும்.

1. 1. திரவியம்:- திரவியம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பதாகும்.

1. 2. குணம்:- உருவம், இரசம் (சுவை), கந்தம் (நாற்றம்), பரிசம் (ஊறு), சங்கை (எண்), பரிமாணம் (அளவு), வேற்றுமை, சையோகம் (கூட்டம்), விபாகம் (பிரிவு), பரத்துவம் (முன்மை), அபரத்துவம் (பின்மை), புத்தி (அறிவு), சுகம் (இன்பம்), துக்கம் (துன்பம்), இச்சை (காமம்), துவேஷம் (வெகுளி), பிரயத்தனம் (முயற்சி), குருத்துவம் (திண்மை), திரவத்துவம் (நெகிழ்ச்சி), சிநேகம், சம்ஸ்காரம் (வாசனை), தருமம் (புண்ணியம்) அதர்மம் (பாவம்), சத்தம் (ஓசை) என இருபத்துநான்காகும்.

1. 3. கருமம்:- எழுதல், விழுதல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என ஐந்தாகும்.

1. 4. சாமானியம்:- பரம், அபரமென இரு வகையாகும்.

1. 5. விசேஷம்:- நித்தியத் திரவியங்கள் அனந்தமாகலின் அவற்றின் கண்ணிருப்பனவாகிய விசேஷங்களும் அனந்தமேயாம்.

1. 6. சமவாயம்:- சமவாயம் ஒன்றே.

1. 7. அபாவம்:- சம்சர்க்காபாவம், அன்னியோன்னியாபாவமென இருவகைத்து.

## 2. திரவியங்களின் சமானிய இலக்கணம்:

2. 1. பொருண்மைச் சாமானியமுடையதாதல், குண முடையதாதல் திரவியம்.

2. 2. குணத்தன்மை சாமானியமுடையதாதல், திரவியம் கர்மம் என்னும் இரண்டிற்கும் வேறுய்ப் பொது வியல்புடையதாதல் குணம்.

2. 3. கருமத் தன்மைப் பொதுவியல்புடையதாதல், அசைவு வடிவினதாதல் கருமம்.

2. 4 நித்தியமாய், ஒன்ருய்ப் பலவற்றிற் சமவேதித் திருப்பது (உள்ளடங்கியிருப்பது), சாமானியம்.

2. 5. இது இதனினும் வேறு எனப் பிரித்தறியும் புத்திக்கு ஏது விசேஷம்.

2. 6. நித்திய சம்பந்தம் சமவாயம்.

2. 7. பாவத்திற்கு (உண்மைக்கு) வேருயது, அபாவம்.

## 3. திரவியங்களின் விசேட இலக்கணம்:–

3. 1. பிருதிவித் தன்மை பொதுவியல்புடையது. பிருதிவி. உருவம், இரசம், கந்தம், பரிசம், சங்கை (எண்), பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம் (அனுபவத்திற்குமுற்பட்ட), அபரத்துவம் (அனுபவத்திற்குட்பட்ட), குருத்துவம் (நிறை), திரவத்துவம், சம்ஸ்காரம் (வாசனை) எனப் பதினன்கு குணங்களுடையது. அது நித்தியம், அனித்தியம் என இரு வகைப்படும். நித்தியம் பரமாணுவடிவம் (அணு வியல்புடையது). அனித்தியம் காரிய வடிவம் (காரிய வியல்புடையது). அதுவும் (காரியமும்), சரீரேந்திரிய விடயவேறுபாட்டால் மூவகைப்படும். அவையாவன சரீரம் (உடல்), இந்திரியம் (புலன்), விஷயம்.

.3 1. 1. சரீரம்:- யோனிஜம், அயோனிஜம் என இரு வகைப்படும். யோனிஜம் நம்மனோர்க்குள்ள பிரத்திய சித்தமான சுக்கில, சுரோணிதக் கலப்பினாலாகியது. அயோனிஜம் சுக்கில சுரோணிதக் கலப்பின்றி தர்ம விசேடத்தோடு கூடிய அணுவினாலுண்டாகியது. உ-ம்: தேவரிஷிகளாகிய நாரதர்.

3. 1. 2. இந்திரியம்:- கந்தத்தைக் கிரகிக்கும் இராணம், அது நாசி நுனியிலிருப்பது.

3. 1. 3. விடயம்:- மண், கல், தாவரமென்னும் பேதத்தால் மூவகைப்படும். மண்ணும் கல்லும் பிரசித்தம். தாவரம் மரம், கொடி முதலியன.

3. 2. நீர்:- அப்புத் தன்மையாகிய பொதுவியல்புடையது அது உருவம், இரசம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சினேகம், சம்ஸ்காரம் என்னும் பதினான்கு குணங்களுடையது. அது நித்தியம், அனித்தியம் என இரு வகைப்படும். நித்தியம் அணுவடிவத்தையும், அனித்தியம் காரிய வடிவத்தையும் கொண்டது, அதுவும் சரீரேந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும்

3. 2. 1. சரீரம்:- சரீரம் வருணலோகப் பிரசித்தமாகிய அயோநிஜமே.

3. 2. 2. இந்திரியம்:- இந்திரியம் இரசத்தைக் கவரும் இரசனம் (சிங்குவை). அது நாசினுனியிலிருப்பது.

3. 2. 3. விடயம்:- ஆறு, கடல் முதலியனவும் இகர மகர முதலியனவுமாம்.

3. 3. தேயு:- தேயுத்தன்மைப் பொதுவியல்புடையது. தேயு (ஒளி), உருவம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்

துவம், அபரத்துவம், திரவத்துவம், சம்ஸ்காரம் என்னும் பதினொரு குணங்களுடையது. அது நித்தியம், அனித்தியம் என இருவகைப்படும். நித்தியம் அணுத்தன்மையுடையது. அனித்தியம் காரியத்தன்மையுடையது. இதுவும் சரீரேந்திரிய விடய வேறுபாட்டால் மூவகைப்படும்.

3 3 1. சரீரம்:– ஆதித்திய உலகத்திற் (சூரிய உலகிற்) பிரசித்தமான அயோநிஜம்.

3 3. 2. இந்திரியம்:– இந்திரியம் உருவத்தைக் கவரும் கக்ஷு. அது கண்ணின் கருமணியின் நுனியிலிருப்பது.

3. 3 3 விடயம்:– அது பௌமம் (கண்ணிலுள்ளது). திவ்வியம் (விண்ணிலுள்ளது), ஔதரியம் (வயிற்றிலுள்ளது), ஆகரஜம் (சுரங்கத்திலுள்ளது) என்னும் வேறுபாட்டால் நான்கு வகைப்படும், ஒளி மண்ணிலுள்ளது. சூரியன், மின்னல், வடவனல் முதலியன விண்ணிலுள்ளது. உண்ட உணவு சமிப்பதற்கு ஏதுவான ஜாடராக்கினி வயிற்றிலுள்ளது. பொன், வெள்ளி முதலியன சுரங்கங்களிலுள்ளது.

3 4. வாயு:– வாயுத் தன்மை என்ற பொதுவியல்புடையது. பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், வேகமென்னும் சம்ஸ்காரம் என்ற ஒன்பது குணங்களையுடையது. அது நித்தம், அநித்தம் என இருவகைப்படும். நித்தம் அணு இயல்பினது. அநித்தம் காரிய வடிவினது. அநித்தம் சரீரேந்திரிய விடய பிராண பேதத்தால் நான்கு வகைப்படும்.

3. 4. 1. சரீரம்:– வாயு உலகத்திற் பிரசித்தமான அயோநிஜமே.

3. 4. 2. இந்திரியம்:– பரிசத்தைக் கவரும். உடல் முழுவதும் வியாபித்துள்ள துவக்கு (தோல்)

3. 4. 3. விடயம்:- வாயு முதலியன.

3. 4. 4. பிராணன்:- சரீரத்தினுட் சஞ்சரிக்கும் வாயு. இருதயத்தில் பிராணன், குதத்தில் அபானன், நாபியிலிருப்பது சமானன், கண்டத்திலிருப்பது உதானன். உடல் முழுவதும் வியாபித்துள்ளது வியானன். அதுவே (பிராணனே) தொழில் வேறுபாட்டால் பிராணன், அபானன், உதானன், சமானன் என்னும் பெயர்களைப் பெறுகிறது. சரீரத்தில் ஐந்து (வாயுக்கள்) இல்லை; மூர்த்தங்களுக்குச் சமான தேச (ஓரிட)த்திருத்தல் விரோதமாகலின்.

3. 5. அணு:- மூர்த்தத் தன்மையினும் நிரவயவம் அணுவாகும். அதுவும் அதீந்திரியமே. அஃது சாளரத்தின் வழி உட்புகும் கதிரோளியிற் காணப்படும் நுட்பமான துகள் (திரிசரேணு) எதுவோ, அதன் ஆறுவது பாகமே அணு என்று சொல்லப்பட்டிருக்கிறது. காரணத்தின் பின்னுண்டாவது காரியம். அது துவியணுக, திரியணுக முதலிய பேதத்தால் அனந்த விதமாகும். அவற்றுள், இரண்டு அணுக்களின் சையோகத்தால் துவியணுவும், மூன்று துவியணுக்களின் சையோகத்தால் திரியணுவும், நான்கு திரியணுக்களின் சையோகத்தால் சதுரணுவும் ஏற்படும். இவ்வாறாய பஞ்சாணுக முதலிய போகாயதனமான அந்தியாவயவி (போகத்திற்கிடமான ஈற்றவயவமுடையது), சரீரம் சுக–துக்கங்களில் இரண்டிலொன்று புலப்படத் தோன்றல் போகம். திரவியத்தை உண்டுபண்ணாத காரியத்திரவியம் அந்தியாவயவி, சரீரத்தோடு கூடிய ஞானகரணமான அதீந்திரியம். இந்திரியம் அறியப்படும் தன்மையிற் போக சாதனமாயுள்ளது விஷயம்.

3. 6. ஆகாயம்:- சத்த சமவாயி காரணம் ஆகாயம். அது சத்தம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், என்னும் ஆறு குணங்களையுடையது. அதுவும் இலகுத்தன்மையான ஒன்றும்.

யாண்டுங் காரியம் காணப்படுதலான் விபுவாம். விபுத்தன்மையான் நித்தியமாம். ஆயினும் அஃது செவித்துளையின் வளைபட்டதாய்ச் சத்தத்தைக் கவருஞ் சுரோத்திரேந்திரிய வடிவினதாயிருக்கும்.

3. 7. காலம்:- சேட்டத்துவகனிட்டத்துவங்களின் ஞானஜனமான (மூப்பிளமைகளின் உணர்ச்சி வயத்தான) பரத்துவாபரத்வங்களால் அனுமிக்கப்படுவது காலம். அது சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் ஐந்து குணங்களுடையதாகும். அதுவும் ஒன்றாய் நித்தமாய் விபுவாயிருக்கினும் உபாதிபேதத்தாற் சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலமென மூவகைப்படுகிறது. அந்த வியக்தியின் (பொருளின்) துவம்சவிசிஷ்ட (அழிவையடுத்த) காலம் அவ்வியக்திக்கு அதீத (சென்ற) காலமாம். அவ்வியக்தியின் பின்னின்மை முன்னின்மைகளைத் தழுவாத காலம் அவ்வியக்திக்கு வர்த்தமானகாலமாம். அவ்வியக்தியின் பிராகபாவ விசிஷ்டகாலம் அவ்வியக்திக்கு வருங்காலமாம்.

3. 8. திக்கு:- சேய்மையண்மைகளின் ஞானஜனமான பரத்துவங்களால் அனுமிக்கப்படுவது திக்கு (வெளி). அது சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் ஐந்து குணங்களையுடையது. அதுவும் ஒன்றாய் விபுவாய் நித்தமாயிருக்கினும், உபாதிபேதத்தாற் கிழக்கு, மேற்கு, வடக்கு தெற்கு என நான்கு வகைப்படும். உதயாசலத்திருக்கும் திக்கு கிழக்கு, அஸ்தாசலத்திருக்கும் திக்கு மேற்கு, மகாமேருவையடுத்த திக்கு வடக்கு, மகாமேருவான் மறைபட்ட திக்கு தெற்கு.

3. 9. ஆன்மா:- ஆன்மத்தன்மைப் பொதுவியல்புடையது ஆன்மா. அது சீவேசுவர பேதத்தால் இருவகைப்படும். அனித்திய ஞான முதலியவற்றையுடை ஜீவதுதுயன். சங்கை, பரிமாணம், வேற்றுமை,

சையோகம், விபாகம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்தனம், தர்மம், அதர்மம், (பாவனை யெனும்) சம்ஸ்காரம், எனப் பதினான்கு குணங்களையுடையது. அதுவும் சுகதுக்காதி விசித்திரத் தன்மையால் சரீரங்கள்தோறும் வேறாகும். நித்திய ஞானாதிகளை உடையவன் ஈஸ்வரன். அவன் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், புத்தி, இச்சை, பிரயத்தனம் என எட்டுக் குணங்களையுடையவன். அவன் ஒருவனே சரீரவேதுவாகிய அதிர்ஷ்ட (புண்ணிய - பாவ) மில்லாமையாற் சரீர மில்லாதவனுமாவான். புருடனது அதிர்ஷ்டத்தால் பெண்ணின் சரீரத்தினுள் உட்பத்தியுண்டாதல் போலல்லாது ஈஷ்வரனுக்கு சரீரோற்பத்தி உண்டாவதில்லை. நம்மனோர்களது அதிர்ஷ்டத்தால் முத்தனுக்கும் சரீரோற்பத்தி உண்டாகுமெனலாகாது. சரீரத்திற்கேதுவாகிய இச்சை முதலியன ஆண்டு (முத்தரிடத்து) இன்மையான். ஆகையான் சதுர்ப்புஜத்தன்மை முதலியவற்றின் சிரவணம் (ஸ்மிருதியாதிகளில்) பொருந்துகிறது. ஆன்மா இருவகைத்தாயினும் நித்தியமாம்.

3. 10. மனம் :- மனத்தன்மைப் பொதுவியல்புடையது மனம். அது சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம் (வேகமென்னும்) சம்ஸ்காரம் என எட்டுக் குணங்களுடையது, அதுவே சுகமுதலியவற்றின் ஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியமாகும். அது உயிர்தோறும் வேறாய், அணுவாய், நித்தியமாயிருக்கும்.

4 குணம்

4. 1. உருவம் : விழிமாத்திரத்தாற் கவரப்படும் சாதியையுடைய குணம் உருவம், குணம் எனும் சொல் பிரஸங்கயை நீக்குதற் பொருட்டாம், அது

சுக்கிலம் (வெண்மை), கிருஷ்ணம் (கருமை), பீதம் (பொன்மை), இரக்தம் (செம்மை), அரிதம் (பசுமை), கபிலம் (புகைமை) என்னும் பேதத்தால் அறுவகைப் படும். வெண்மையாதி ஆறும் பிருதிவி மாத்திரத்தாம். ஜலத்திற் சொச்சமான (பளபளப்புள்ள) வெண்மை யும், தேயுவில் விளக்கமான வெண்மையுமாம்.

4. 2. இரசம்:– இரசனை நாக்கினுல் கவரப்படுஞ் சாதியுடையது இரசம். அது தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் வேறு பாட்டால் அறுவகைப்படும். ஆறுவிதமும் மண் மாத் திரத்திலுண்டு. நீரில் மதுரமொன்றே.

4. 3. கந்தம்:– நாசியினுல் கவரப்படுஞ் சாதியுடை யது கந்தம் (மணம்). அது நற்கந்தம், துர்கந்தமெனு இருவகைப்படும். இருவகைக் கந்தமும் பிருதிவிக் கண் ணேயாம்.

4. 4. பரிசம்:– தொடுகையினுல் கவரப்படும் சாதி யுடையது பரிசம். அது சீதம் (குளிர்ச்சி), உஷ்ணம் (சூடு), குளிர்ச்சியும் சூடுமில்லாதது என்ற பேதத்தால் மூன்றுவகைப்படும். ஜலத்திற் சீதமும், ஒளியில் உஷ்ணமும், பூமியிலும், காற்றிலும், சீதோஷ்ணமில் லாததுமாம்.

4. 5. பிருதிவியின் கண்ணுள்ள உருவ முதலிய நான்கும் இருவகைத்தாயினும் அனித்தமானதும், பாகத்தாற் றோன்றுவனவுமாம். ஆண்டுத் தேயுவின் சையோகத்தால் (சுடத்துள்ள) முன்னைய கருமை முதலியவற்றின் நீக்கத்தில் சிவப்பு முதலியவற்றின் உட்பத்தி காணப்படுதலான். அதனினும் முன்னுருவ முதலியவற்றை அழித்து வேற்றுருவ முதலியவற்றை உண்டுபண்ணும் பாகம் அணுக்களின் கண்ணேயா மென்பது வைசேஷிக மதம். துவியணுகம் முதலிய அவயவிகளினுமா மென்பர் நையாயிகர். நீர், ஒளி,

வாயுக்களிலும். நித்தியத்திலுள்ள உருவ முதலியன நித்தியமும், அனித்தியத்திலுள்ளன அனித்தியமுமாம். உருவ முதலிய நான்கும் உற்பூதம் (விருத்தியடைந்தது), அனுற்பூதம் (விருத்தியடையாதது', என பேதத்தால் இருவகைப்படும். (உற்பூதத் தன்மை - காட்சியைப் பயப்பதோர் தரும விசேடம் அதனின்மை அனுற்பூதத் தன்மையாகும்). அனுற்பூதங்கள் மணம் சுவை, கேட்டல், பரிசம் என்பனவற்றிற்குரியது. உற்பூதங்கள் நிலம் முதலியவற்றை உண்டுபண்ணும் அணு' துவியணு, திரியணு முதலியவற்றிலிருப்பது. அவை சித்திரம், அசித்திரமென்னும் பேதத்தால் இருவகையாகுமென்பர். கருமை, பொன்மை முதலியனவும், தித்திப்பு, கைப்பு முதலியனவும், நற்கந்தம், துர்கந்த முதலியனவும், மென்மை வன்மை முதலியனவுமாகிய அவயவங்களால், ஆக்கப்பட்ட படமுதலியவற்றிற் சித்திரங்களும் பிற இடங்களில் அசித்திரங்களுமாம்.

4. 6. இலக்கம்:- எண்பதற்கு உதவியாயிருப்பது சங்கை (இலக்கம்). அது ஒன்றினிருப்பது, பலவற்றி விருப்பது எனும் பேதத்தால் இருவகைப்படும். அவற்றுள் ஒருமை ஒன்றினிருப்பது. அது நித்தியப் பொருளைச் சேர்ந்தது நித்தியம். அனித்தியப் பொருளைச் சேர்ந்தது அனித்தியமுமாகும். (இருமை முதலிய பலவற்றிலிருப்பது. அது அனேக ஒருமைகளை விஷயஞ் செய்யும் அபேக்ஷா புத்தியாற் தோன்றி அதன் நாசத்தான் நசிக்கத்தக்கதாய் அனித்தியமாகவேயிருக்கும்) அணுக்கள் துவியணுக்கள் முதலியன அதீந்திரியமாயினும், பசுவானது அபேக்ஷா புத்தியினுற் தோன்றி அதிஷ்ட (புண்ணிய, பாவ) நாசத்தால் நசிக்கத் தக்கனவாம்.

4. 7. அளத்தல்; அளத்தல் வழக்கிற்கு சிறப்புக் காரணம் பரிமாணம். அது நுண்மை, பெருமை, குறுமை, நெடுமை என நான்கு வகை. அவற்றுள், நுண்மையும்.

குறுமையும் அணு, துவியணுக்களினுலும், பெருமையும், நெடுமையும் திரியணு, சதுரணு முதலியவற்றினுலும் ஆனது. இந்நான்கும் நித்தம், அனித்தம் என இருவகைப்படும். நித்தப் பொருளிலுள்ளது நித்தம். அனித்தப் பொருளிலுள்ளது அனித்தம். அது (அனித்த பரிமாணம்) சாங்கியாஜந்நியம், பரிமாணஜந்நியம், பிரசயஜந்நியம் என மூவகைத்து. அவற்றுள் துவியணு பரிமாணம் பரமாணு விருமைச் சங்கையாற் தோன்றியதாம். திரியணுக பரிமாணம் துவியணுக மும்மை யெண்ணலாகியதாம். ஆண்டு அவயவத்திலுள்ள அணுப்பரிமாணம் (நுண்மைப் பரிமாணம்) அசமவாயியாகுமாயின், அதற்கு அணுவினும் அணுவாந் தன்மை நேரும். அவயவ பரிமாணத்திற்குத் தனது சமானசாதியுடைய அல்லது மேன்மையையுடைய பரிமாணத்தை உண்டுபண்ணுந் தன்மையாகிய நியமமிருத்தலின். சதுரணுக முதலிய பரிமாணம் பரிமாண ஜந்நியமாம், அவயவத்திலுள்ள மகத்துவமே ஆண்டு அசமவாயியாயிருத்தலால் தூல பிண்ட பரிமாணம் பிரசய ஜந்நியமாம். (மகத்துவ பரிமாணமுடைய) அவயவங்கட்கு (ஒன்றற் கொன்று) உண்டாகும். சையோகம், பிரசயம், அதற்கே ஆண்டு அசமவாய முடைமையிருத்தலால்:

4. 8. வேற்றுமை:- வேறென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணம் வேற்றுமை. அதுவும் ஒன்றிலிருப்பது, பலவற்றிலிருப்பது என்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவற்றுள் ஒரு வேற்றுமை ஒன்றிலிருப்பது. அதுவும் நித்தத்திலுள்ளது நித்தமும். அனித்தத்திலுள்ளது அனித்தமுமாகும். இரு வேற்றுமை முதலியன பலவற்றிலிருப்பது. அதுவும் பல ஏகவேற்றுமைகளை விஷயஞ் செய்யும் அபேக்ஷா புத்தியாற்றோன்றி, அதன் நாசத்தால் நசிக்கத்தக்கதாம்.

4. 9. சையோகம்:- கூடியதென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணஞ் சையோகம். அது கர்மஜம் (தொழி

லாற் தோன்றியது), கூட்டத்தாற் தோன்றியது என இருவகைத்து.

4. 10. விபாகம்:- பிரிந்தது எனும் வழக்கிற்குச் சிறந்த காரணம் விபாகம்: அது தொழிலாற் தோன்றியது, பிரிவாற் தோன்றியது என இருவகைத்து.

4. 11. அபரத்துவம், பரத்துவம்:- முன்னென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணம் பரத்துவம். பின்னென்னும் வழக்கிற்குச் சிறந்த காரணம் அபரத்துவம். அவை திக்கால், காலத்தால் என இருவகை.

4. 12. புத்தி:- பொருள் விளக்கமாதல் புத்தி. அது ஸ்மிருதியும் (நினைவும்), அனுபவமுமேன இரு வகைத்து. வாசனை மாத்திரத்தாற் தோன்றும் ஞானம் நினைவு. அனுபவம் பிரமை (உண்மையனுபவம்), அப்பிரமை (இன்மையனுபவம்) என இருவகைத்து.

பிரமாணப் போலியாற் தோன்றும் அயதார்த்த (இன்மை) அனுபவம் அப்பிரமை. அதுவும் பிரமை (மயக்கம்), சமுசயம் என்னும் வேறுபாட்டால் இரு வகைத்து. விபரீத நிச்சயம் பிரமம். சமுசயம் நிச்சயமில்லாதது.

5. காரணம்:- வியாபாரமுடைய கரணம், காரணம். அது வெட்டுந் தொழிற்கு கோடரி காரணமாதல் போலவாம். அதனாற் (காரணத்தாற்) றோன்றப்படுந் தன்மையதாய், அதனாற் (காரணத்தாற்) றோன்றற் பாலதாய வொன்றனைத் தோற்றுவிப்பது வியாபாரம். அது கோடரிக்கும் மரத்திற்குமுள்ள சையோகம் போலவாம். பிறிதோராற்றாற் பெறப்படாததாய் நியதமாய் (இன்றியமையாது) காரியத்திற்கு முன் னிற்பது காரணம். பிறிதோராற்றாற் பெறப்படுத லின்மை பிறிதோராற்குப் பெறப்படாமையாம். பிறி தோராற்றாற் பெறப்படுதல் மூவகைத்து.

முதலாவது, எதனோடு கூடியே எதனைக் குறித்து எது முன்னிற்பதென்று உணரப்படுகிறதோ, அது அதனைக் குறித்து அதனாலே பிறிதோராற்றாற் பெறப் படுவதென்பதாம்.

இரண்டாவது, பிறிதொன்றனைக் குறித்து முன் னிற்றலுணர்ந்துழி, எடுத்துக் கொண்டதனைக் குறித்து முன்னிற்றலால் உணரப்படுவது யாது, அது அவ்வெடுத் துக்கொண்டதினைக் குறித்துப் பிறிதோராற்றாற் பெறப் படுவ தென்பதாம். குடத்தைக் குறித்து ஆகாயமும், குயவனது பிதாவும் பிறிதொராற்றாற் பெறப்படுவன வாம்

மூன்றாவது, பிறவிடங்களிலே நியதமாய் முன்னிற் பது இதுவென்று துணியப்பட்டதனாற்றானே காரியம் தோன்றுழி, அதனோடு உடன் நிகழ்வது பிறிதோராற் றாற் பெறப்படுவது என்பதாம்.

அக்காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் பேதத்தால் மூவகைத்தாம். அவற்றுள் (1) எதைச் சமவேதித்து (ஒற்றித்து)க் காரியம் உட்பத்தி யாகிறதோ அது சமவாயிகாரணம். அது படத்திற்குஃ (துணிக்கு) தந்துகளும், கடத்திற்கு ஓடுகளும், தம்மிலுள்ள உருவமுதலியவற்றிற்குப் படம், குடம் முதலியனவும் சமவாயி காரணமாதல் போலவாம். (2) சமவாயி காரணத்தை யடுத்த காரணம் அசம வாயி காரணம். (3) மேற் கூறிய இரண்டிற்கும் வேறாகிய தன்மையுடையது நிமித்த காரணம். கடத் திற்கு தண்டு சக்கர முதலியன நிமித்த காரணம்.

6 பிரத்தியட்சப் பிரமாணம்:- இப்பிரமாணம் பிரத்தி யட்ச பேதத்தால் இருவகைப்படும். சத்த முதலியன வும் அனுமான விதியினாலேயே பிரத்தியட்சமாம். பிரத்தியட்சப் பிரமைக்கு (புலப்படக் காணும் காட்சி யறிவிற்கு)க் காரணம் பிரத்தியட்சம் (காண்டல்)

அதுவும் இந்திரிய வடிவினதாம். இந்திரிய விடய சம்பந்தத்தாற் தோன்றும் ஞானம் பிரத்தியட்சம். அது சவிகற்பம், நிருவிகற்பம் என்னும் பேதத்தால் இருவகைத்து. விசேடண, விசேடியங்களின் சம்பந்தத்தைக் கவரும் பிரத்தியட்சம் சவிகற்பம். அது குடம் என்ற ஞானம். விசேடண, விசேடிய சம்பந்தத்தைக் கவராத பிரத்தியட்சம் நிருவிகற்பம்.

மீண்டும் பிரத்தியட்சம் இலௌகிகம், அலௌகிகம் எனும் பேதத்தால் இருவகைப்படும்.

6. 1. இலௌகிகப் பிரத்தியட்சம்:- இலௌகிகப் பிரத்தியட்சத்திற்கு ஏதுவான சம்பந்தமானது சையோகம், சையுக்த சமவாயம், சையுக்த சமவேதசமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடியத்தன்மை என அறுவகைப்படும். (1) திரவியத்தைக் கவர்தல் சையோகம். நேத்திர முதலியனவற்றிற்கு குடமுதலியவற்றின் சையோகமுண்டு. மனதின் சையோகத்தால் "நானிருக்கிறேன் என ஆன்மா கிரகிக்கிறது. (2) குடத்தில் உருவம், அசைவு. திரவியத்தன்மை முதலிய இருக்கின்றனவென்று குணம், கர்மம், திரவியத்துள்ள சாதி என்பவை சையுத்த சமவாயத்தாற் கிரகிக்கப்படுகின்றன; நேத்திர முதலியவற்றோடு சையுத்தமான குடத்தில் உருவ முதலியவற்றிற்குச் சமவாயமிருத்தலின். (3) குடத்திலுள்ள குண கர்ம சாதிகள் சையுக்தசமவேத சமவாயத்தாற் கிரகிக்கப்படுகின்றன. (4) ஈண்டு வீணைச் சத்தமிருக்கிறதென சமவாயத்தாற் சத்தம் கிரகிக்கப்படுகிறது (5) சத்தத்தில் சத்தத்தன்மை, குணத்தன்மை முதலியன சமவேத சமவாயத்தினால் கிரகிக்கப்படுகிறது. (6) விசேடணத் தன்மையால் சமவாயமும், அபாவமும் கிரகிக்கப்படுகிறது. விசேடணத்தன்மையானது இந்திரிய விசேடணத்தன்மை, இந்திரிய சம்பந்தமுடைய விசேடணத் தன்மையென இருவகைப்படும்.

இந்திரிய விசேடணத் தன்மையினுல் சத்தசமவாயமும், சத்தாபாவமும் இரகிக்கப்படுகின்றன. இந்திரிய சம்பந்தமுடைய விசேடணத் தன்மையால் குட முதலியவற்றின் சமவாயமும், குடத்தினின்மையும் இரகிக்கப்படுகின்றன.

6. 2. அலௌகிகப் பிரத்தியட்சம்:- அலௌகிகப் பிரத்தியட்சத்தில் ஏதுவாகும் சந்நிகருஷம் (சம்பந்தம்) சாமானிய லட்சணம், ஞான லட்சணம், யோக தர்மம் என மூவகைத்து. இம் மூவகைச் சம்பந்தமும் ஆறிந்திரியங்களும் சககாரியா (உபகாரமாக) மென்று சம்பிரதாயம் உணர்ந்தவர் கூறுவர். மனதிற்கே சககாரியாமென்பர் சூலபாணிமிசிரர். அறியப்படும் சுவாசிரயங்களின் (தமது சார்புகளின்) சம்பந்தம் சாமானியம். அறியப்படும் கடத்தன்மைச் சம்பந்தத்தாற் கடங்களென்னும் வடிவினதாக சகல கடங்களின் பிரத்தியட்சம் உண்டாகிறது. ஞானலட்சண சம்பந்தத்தால் அதன் விடயவடிவினதாய அவ்வப்பதார்த்தங்களின் பிரத்தியட்சம் உண்டாகிறது. சந்தணம் வாசனையுடையதென்று கண்ணுற் பார்க்குமிடத்து, வாசனையின் விளக்கமும் ஞானசந்நிகருசத்தால் உண்டாகிறது. யோக தர்ம சம்பந்தத்தால் யோகிகளுக்கு வஸ்து மாத்திரத்தின் பிரத்தியட்சம் (மனதினுல்) உண்டாகிறது.

அந்தப் பிரத்தியட்சமும் கிராணம் (மூக்கு), இரசனம் (நாக்கு), சட்சு (கண்), துவக்கு (தோல்), சுரோத்திரம் (செவி), மனது என்னும் பேதத்தால் ஆறுவகைப்படும். கந்தப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் மூக்கு. இரசப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் நாக்கு. உருவப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் கண். பரிசப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் தோல். சத்தப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் செவி. சுகாதிப் பிரத்தியட்சத்திற்குக் காரணம் மனம். சந்தணத்தில் வாசனையிருக்கிறது. வெல்லத்தில் தித்திப்பிருக்கிறது.

கடத்தில் இரத்த வர்ணமிருக்கிறது. வனத்தில் சிங்க நாதமிருக்கிறது. என்னிடத்து சுகமிருக்கிறது.

கிராண முதலியவற்றின் வியாபாரம் கிராண முதலியவற்றிற்கும் மனதிற்குமுள்ள சையோகமாகும். மனதின் வியாபாரம் ஆன்ம சையோக (ஆன்மாவிற்கும் மனதிற்குமுள்ள சையோக) மாம். கிராணம். இரசணம், சுரோத்திரமென்பவை திரவியத்தைக் கவர்வனவாகா, சட்சு, துவக்கு மனமென்பவை திரவியத்தைக் கிரகிப்பனவாம்.

7. அனுமானம்:- அனுமிதி காரணம் அனுமானம். அதுவும் தூமம் (புகை) வன்னி(நெருப்பு)யின் வியாப்பியமாமென்னும் வியாத்தி ஞானமாம். வன்னியின் வியாப்பிய தூமமுடையது இதுவென்னும் இலிங்க பராமரிசம் (குறியாராய்ச்சி) வியாபாரமாம். அடுக்களை முதலிய திருட்டாந்தத்தில் வன்னிக்கும் தூமத்திற்கும் பெரும்பாலும் உடனிகழ்ச்சி காண்டலால் வியாப்பியத் தன்மையாலுண்டாகும் தூமஞானம் முதலாவது. அதன்பின் பருவத (மலை) முதலியவற்றிற் தூமத்தைக் கண்டு வியாப்பியத் தன்மையால் அதை நினைத்தல் இரண்டாவது. அதன்பின் ஆண்டு வியாப்பியத் தன்மையான் தூமத்தின் பராமரிசம் வன்னி வியாப்பிய தூமமுடையது இது என்னும் வடிவினதாயுண்டாகிறது. இது மூன்றாவது. இலிங்க ஞானத்தாற் (ஆராச்சியால்) தோன்றும் இலிங்க ஞானம் அனுமிதி. அஃது, பர்வத முதலியவற்றிற் புகையின் ஞானம் நிகழ்ந்த பின்னர் பர்வதம் வன்னியுடைத்தென்னும் ஞானமுண்டாதல் போலுமென்க. வியாத்தியடுத்த பக்க தருமத் தன்மையுடையது இலிங்கம். வியபிசாரமின்றிய சாத்திய சாமானாதிகரணியம் வியாப்தி. இஃது (வியாப்தி) "பர்வதம் வன்னியுடைத்து புகையுடைமையான்" என்றற்றொடக்கத்துச் சத்தேது (உண்மையேது) விலுள்ளது. "யாண்டு யாண்டுப் புகை ஆண்டாண்டு வன்னி" எனும் நியமமிருத்தலின்,

"மலை புகையுடைத்து வன்னி யுடைமையான்" என்றற்றொடர்க்கத்து அசத்தேது (இன்மையேது) அன்று. யாண்டு யாண்டுத் தீ ஆண்டாண்டுத் தூமம்" எனும் நியமமின்மையான். ஒழுகக் காச்சிய இரும்பில் வன்னியிருந்தும் தூமமின்மையின், வியபிசார ஞானமின்மையோடு கூடிய (பிறழ்ச்சியுணர்வின்மையோடு கூடிய) ஏது சாத்தியங்களின் உடனிகழ்ச்சி யுணர்வு வியாத்தியைத் தெரிவிப்பதாம். அஃது எங்ஙனமெனின், இங்ஙனமாம்:- ஏதுவானது சாத்தியாபாவமுடையதன் கண்ணிருத்தல் வியபிசாரம். அதனுணர்ச்சியுளதாய வழி வியாத்தி கிரகிக்கப்படாமையின், அதன் (வியபிசாரத்தின்) அபாவம் ஆண்டு காரணமாம். ஏது சாத்தியங்களி னுடனிகழ்ச்சி யுணர்வு அன்னுவய வெதிரேகங்களால் (உடன்பாட்டாலும் எதிர்மறையாலும்) ஆண்டுக் காரணமாம். பக்கத்தர்மம் யாதெனில், பக்கத்தைச் சார்ந்திருக்கும் தன்மையாம் பக்கத்தன்மையும் துணிதல் வேட்கை யின்மையோடு கூடிய துணி பொருட் பெறுதியின்மையாம். இஃது பர்வத முதலிய பக்கத்திலுளதாம், துணிதல் வேட்கையின்மையோடு கூடிய சாத்திய நிச்சயம் (துணிபொருட் பெறுதி) ஆண்டின்மையான், பர்வத முதலியவற்றில் துணிபொருட் பெறுதி இருக்கினும், துணிதல் வேட்கையுளதாய வழியே, "மலை தீயுடைத்து, புகையுடைமையான் என்னும் அனுமானம் சம்பவித்தலான் ஆண்டு பக்கத்தன்மையை அடைதற் பொருட்டு துணிதல் வேட்கையில்லாமையோடு கூடிய தன்மை சாத்திய நிச்சய விசேடணமாம் அங்ஙனமே துணிதல் வேட்கையில்லாமையோடு கூடிய சாத்திய நிச்சயம் ஆண்டின்மையான் பக்கத்தன்மையாம்

அவ்வனுமானம் கேவலாந்நுவயி, கேவலவெதிரேகி என இருவகைத்து.

7. 1. கேவலாந்நுவயி:- யாண்டு அந்நுவயவியாத்தி மாத்திரமுளதோ, அது கேவலாந்நுவயி. அது குடம்

அபிதேயம், பிரமேயத் தன்மையாலென்பதாம், ஈண்டு குடம் பக்கம். அதன் அபிதேயத்தன்மை சாத்தியம். பிரமேயத் தன்மையின் ஏது; ஆங்கு, யாண்டு யாண்டுப் பிரமேயத்துவம், ஆண்டாண்டு அபிதேயத்துவம் படம்போல் என்னும் அன்னுவய வியாத்தி மாத்திர முளது. யாண்டு யாண்டுச் சாத்தியமில்லை. ஆண்டாண்டு ஏதுவில்லை என்னும் வெதிரேக வியாப்தி யில்லை; அபிதேயமும் பிரமேயத் தன்மையும் எங்கு மிருத்தலால்; சாத்தியாபாவ முதலியன அப்பிரசித்த மாயிருத்தலின்.

7. 2. கேவலவெதிரேகி:- யாண்டு வெதிரேகவியாப்தி மாத்திரமுளதோ அது கேவலவெதிரேகி. அது "உயிர்த் திருக்குமுடல் ஆன்மாவோடு கூடியதாம்; பிராணன் முதலியவற்றை யுடைமையான்" என்றற் தொடக்கத்தன போலவாம். இங்கு உயிர்த்திருக்குமுடல் பக்கம்; அதன் ஆன்மாவோடு கூடிய தன்மை சாத்தியம்; பிராணன் முதலியவற்றையுடைமை ஏது; "அஃதில் யாண்டுயாண்டு ஆன்மாவோடு கூடிய தன்மை யில்லையோ, ஆண்டாண்டுப் பிராணன் முதலியவற்றை யுடைமையில்லை, குடமுதலியவற்றிற்போல" என்னும் வெதிரேக வியாத்தி மாத்திரமுளது. "யாண்டு யாண்டுப் பிராணாதிகளுடைமையோ, ஆண்டாண்டு ஆன்மாவோடு கூடிய தன்மையாம் என்னும் அன்னுவய வியாத்தியில்லை. திருட்டாந்த மின்மையானும் உயிர்த் திருக்குமுடல் மாத்திரம் பக்கமாதலாலும் வேறிடத்தில் ஏது சாத்தியமென்று இரண்டுமே யின்மையானு மென்க.

7. 3. அன்னுவயவெதிரேகி:- யாண்டு அன்னுவய வியாத்தியும் வெதிரேக வியாத்தியும் சொல்லப்படுகிறதோ அது அன்னுவயவெதிரேகி. அது "பார்வதம் வன்னியுடைத்து, புகையுடைமையான் என்றற் றொடக்கத்தன போலவாம். ஈண்டு பார்வதம் பக்கம்;

அதன் வன்னியுடைமை (நெருப்புடைமை) சாத்தியம்; புகையுடையானென்பது ஏது. இதில் ''யாண்டு யாண்டுத் தூமம், ஆண்டாண்டுத் தீ — அடுக்களைபோல'' என்னும் அன்னுவய வியாத்தியும், இவ்வாறே ''யாண்டு யாண்டு வன்னி அபாவமோ ஆண்டாண்டு புகையின் அபாவமாம் - மடுப்போல'' என்னும் வெதிரேக வியாத்தியுமிருக்கின்றன. அன்னுவயத்தில் சாதனம் வியாப்பியமும் சாத்தியம் வியாபகமுமாக அங்கீகரிக்கப்படுகிறது. வெதிரேகத்திற் சாத்தியாபாவம் வியாப்பியமும் சாதனத்தினழிவு வியாபகமுமாம். வியாப்பியத்தின் வசனமுன்னும், வியாபகத்தின் வசனம் அதன் பின்னுமாம். இவ்வாறு பரீட்சிக்கப்படும். வியாத்தி உண்மையாக விளக்கமாகிறது. இம்மூன்றனுள் அன்வயவெதிரேகியானது ஐந்துருவங்களையடைந்தே தனது சாத்தியத்தைச் சாதிக்கிறது.

அவ்வைந்து உருக்களாவன பக்கதருமம், சபக்கத்திருத்தல், விபக்கத்தின்மை, அபாதித விஷயத்துவம், அசற்பிரதிபக்கத்துவம் என்பன.

7. 4. **பக்கதருமம்:**- பக்கமாகிய ஆசிரயத்திருத்தல் பக்கதருமம்.

7. 5. **சபக்கம்:** நிச்சயிக்கப்பட்ட சாத்தியம் (துணிபொருள்) உடையது சபக்கம். ஆண்டிருத்தல் சபக்கத்திருத்தலாம்.

7. 6. **விபக்கத்தின்மை:**- நிச்சயிக்கப்பட்ட சாத்தியபாவமுடையது விபக்கம். ஆண்டில்லாதிருத்தல் விபக்கத்தின்மை.

7. 7. **அபாதித விஷயத்துவம்:**- மற்றோர் பிரமாணத்தால் அனக்கப்படாத சாத்தியாபவமுடைமை அபாதித விஷயத்வம் (மறுதலைக்கு இடமையமாகாமை).

7. 8. அசற் பிரதிபக்கத்துவம்:- சாத்தியா பாவத்தைச் சாதிக்கும் மற்றேரேதுவின்மை அசற்பிரதி பக்கத்துவம்.

7. 9. இவ்வைந்து வடிவங்களும் வன்னியைச் சாதிக்கும் தூமமுதலிய அன்வய வெதிரேகங்களிலுள்ளனவாம். கேவலாந்நுவயியில் விபக்கத்தின்மை யில்லை; விபக்கம் பிரசித்தமாகாமையின், கேவல வெதிரேகத்தில் சபக்கத்திருத்த லில்லை; சபக்கம் சித்தியாமையான்.

7. 10. மூவகையனுமானமும் தன்பொருட்டு, பிறர் பொருட்டு என இருவகைத்தாம்:

7. 10. 1. சுவார்த்தனுமானம்:- தனது அனுமிதிக்கே ஏதுவாவது சுவார்த்தனுமானம் (தன் பொருட்டனுமானம்).

7. 10. 2. பரார்த்தனுமானம்:- தானே புகையால் அக்கினியை அனுமித்து, அன்னியர்க்கு அறிவித்தற் பொருட்டு ஐந்தவயவங்களோடு கூடிய அனுமான வாக்கியத்தைப் பிரயோகித்தல் பரார்த்தனுமானம் (பிறர் பொருட்டனுமானம்). ஐந்தவயவங்களாவன:- பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பனவாம்.

7. 10. 2. 1. பிரதிஞ்ஞை:- பக்கத்தில் சாத்தியத்தை நிச்சயித்தல் பிரதிஞ்ஞை; அது பார்வதம் வன்னியுடைத்து என்பதாம்.

7. 10. 2. 2. ஏது:- இன், ஆன், உருபீறாக ஏதுவை எடுத்துக் காட்டும் வாக்கியம் ஏது. அது புகையுடைமையான் என்பதாகும்.

7. 10. 2, 3. உதாரணம்:- வியாத்தியைப் பிரதிபாதிக்கும் வசனம் உதாரணம். அது யாது புகையுடைத்து

அது அது வன்னியுடைத்து அடுக்களைபோல் என்பதாம்.

7. 10. 2. 4. உபநயம்:- வியாத்தி விசிஷ்டமாகிய ஏதுவின் பக்க தருமத் தன்மையை எடுத்துக் காட்டும் வாக்கியம் உபநயம். அது "வன்னி வியாப்பிய தூமமுடை திஃது" என்பதாம்.

7. 10. 2. 5. நிகமனம்:- பாதித தத்துவமும் சற்பிரதிபக்கத்வமும் இன்றிய தாற்பரியமுடைய வாக்கியம் நிகமனம். அது "ஆதலால் வன்னியுடைத்து என்பதாம்.

7. 10. 2. 6. இதுவும் அங்ஙனம் என்பது உபநயத்திற்கும், ஆதலால் இங்ஙன மென்பது நிகமனத்திற்கும் உடலாமென்பர் பிராசீனர்.

7. 11. வெதிரேகியில் பிரதிஞ்ஞையும் ஏதுவும் சமமேயாம். உதாரண உபநய நிகமனங்களே வேறுபடுகின்றன. அது, உயிர்த்திருக்குமுடல் ஆன்மாவோடு கூடியதாம்; பிராணன் முதலியவற்றை யுடைமையால் என்புழி, எது ஆன்மாவோடு கூடியதாகாதோ, அது பிராணன் முதலியவற்றை யுடையதாகாது: குடம் போல; இவ்வுயிர்த்திருக்குமுடல் பிராணாதிகளையுடையதாகாதன்று; ஆதலால் அங்ஙனமன்று என வருதல் காண்க.

8. ஏதுப்போலி:- அனுமிதியும் அதன் காரணமுமாகிய இரண்டிலொன்றற்குத் தடையாய உணர்விற்கு விடயமாகும் தர்மம், ஏதுப்போலித் தன்மையினுபாதி. அதனையுடையது ஏதுப்போலி. அது அனைகாந்திகம் (பிறழ்வுடையது), விருத்தம் (மாறுகொள்வது), சற்பிரதிபக்கம் (மறுதலையுடையது), அசித்தம் (பேறில்லாதது), பாதிதம் (மறுப்புடையது), என ஐந்தாம்.

8. 1. அனைகாந்திகம்:- சவ்வியபிசாரம் (பிறழ்சியுடையது) அனைகாந்திகம். அது சாதாரணம் (பொது), அசாதாரணம் (சிறப்பு), அனுபவசங்காரி (முடிபு பெருமை) என மூன்று வகைப்படும்.

8. 1. 1. சாதாரணம்:- சபக்க விபக்கங்களிலிருப்பது சாதாரணம். அது "மலை புகையுடைத்து, அக்கினியுடைமையால்" என்பதாம். அக்கினியானது சபக்கமாகிய அடுக்களையிலும், விபக்கமாகிய ஒழுகக் காச்சிய இரும்பிலுமிருக்கிறது. ஆதலால் சாதாரணமாம். இவ்வுணர்வும் விபக்கத்திலிருக்கும் தன்மையாகிய வியாபிசார விஷயமுடைமையினுல் வியபிசார ஞானவிதியால் வியாத்தியைக் கிரகித்தலிற் பிரதி பந்தகமாம்; வியபிசார ஞான முளதாயவழி வியாத்தியைக் கிரகித்தலுண்டாகாமை மிகப்பிரசித்தமாதலின்.

8. 1. 2. அசாதாரணம்:- சபக்க விபக்கங்களில்லாது பக்கமாத்திரத்தினிலிருப்பது அசாதாரணம். அது "சத்தம் நித்தியம், சத்தத்தன்மையினுல்" என்பது. சத்தத்தன்மை சபக்கமாகிய ஆகாய முதலியவற்றிலும், விபக்கமாகிய குடமுதலியவற்றிலும் இல்லாமல் பக்கமாகிய சத்தமாத்திரத்தினிருத்தலால் அசாதாரணமாம். இவ்வுணர்வும் சாக்ஷாத் அனுமிதியின் பிரதிபந்தகமாம். எங்ஙனமெனின், இங்ஙனமாம்:- சத்தத்தன்மை அன்னுவயி ஏதுவன்று; திருஷ்டாந்தமின்மையான். ஆனுல் வெதிரேகியாம். அங்ஙனமே ஏது எதையுடையதன்கணில்லாததாயிருக்கிறதோ; அது தனதாசிரயத்தில் அதன் அபாவத்தைச் சாதிக்கிறது. எப்படித் தூமம் வன்னியாபாவத்தை உடைய மடு முதலியவற்றின்கணில்லாததாயிருந்து, தனது ஆசிரயமாகிய பார்வத முதலியவற்றில் வன்னியபாவத்தின் அபாவத்தை (வன்னியை)ச் சாதிக்கிறதோ, அது போல சத்தத்தன்மை, நித்தியத் தன்மையுடைய ஆகாய முதலிய சபக்கத்தின்கணில்லாததாய், தனது ஆசிரயமாகிய சத்தத்தில் நித்தியத் தன்மையின்

அபாவமாகிய அனித்தியத் தன்மையைச் சாதிக்கிறது. இவ்வாறே நித்தியத் தன்மையின் அபாவமுடைய குடமுதலிய விபக்கத்தின்கணில்லாததாய், தனது ஆசிரயமாகிய சத்தத்தில் நித்தியத் தன்மையின் அபாவத்தைச் சாதிக்கிறது. ஒரே விடயமாகிய சத்தத்தில் நித்தியத்துவம், அனித்தியத்துவமென இரண்டும் சம்பவியா; அவ்விரண்டிற்கும் விரோதமாதலின். ஆதலால் சத்தத்தன்மையாகிய அசாதாரணத் தன்மையின் ஞானத்தில் சாத்தியானுமிதியில்லை.

8. 1. 3. அனுபஸம்ஹாரி:- அது "யாவும் நித்தியம்; பிரமேயத் தன்மையால் (அளவையால் அளக்கற்பாலதாகலின்)" என்பதாம். ஈண்டு யாவுமே பக்கமாயிருத்தலால் பிரமேயத்தன்மையாகிய ஏது அனுபஸம்ஹாரி. இவ்வுணர்வும் வியாத்தியைக் கவர்தலிற் பிரதிபந்தகமாம்; யாவும் பக்கமாயின் வியாத்தியைக் கிரகிக்கும் உடனிகழ்ச்சியுணர்வுக்கு இடமின்மையால், உடனிகழ்ச்சி நிச்சயமில்லாதுழி வியாத்தி நிச்சயிக்கப்படாமையான்.

8. 2. விருத்தம்:- சாத்தியாபாவத்தில் வியாபித்திருக்கும் ஏது விருத்தம். "இது கோ, அசுவத் தன்மையால்" என்பதாம். ஈண்டும் "யாண்டு யாண்டு அசுவத் தன்மையோ ஆண்டாண்டு கோத்தன்மையின் அபாவம் என்னும் சாத்தியாபாவ வியாத்தி இருத்தலால் அசுவத்தன்மையாகிய ஏது விருத்தமாம். இவ்வுணர்வும் சாக்ஷாத் அனுமிதிப் பிரதிபந்தகமாம். பக்கத்தில் கோத்தன்மையின் அபாவத்தான் வியாபிக்கப்பட்ட அசுவத்தன்மையுடைமையை உணருங்கால் கோத்தன்மையின் நிச்சயம் சம்பவியாமையான்.

8. 3. சற்பிரதிபக்கம்.- சாத்தியா பாவத்தைச் சாதிக்கும் பிறிதோர் ஏது பிரதிபக்கம். அதனையுடையது சற்பிரதிபக்கம். அது "பார்வதம் வன்னியுடைத்து, புகையுடைமையால் - அடுக்களைபோல. அது (மலை)

வன்னியபாவ முடைத்து, பாஷாண மயத்தன்மையால் குட்டியம்போல்'' என வரும். ஈண்டு இரண்டு ஏதுக் களும் ஒன்றிற்கொன்று சாத்தியாபாவத்தைச் சாதிக் கும் தன்மையிருத்தலின், ஒன்றிற்கொன்று சற்பிரதி பக்கத்துவமுண்டு. இவ்வுணர்வும் சாக்ஷாத் அனுமிதிக் குப் பிரதிபந்தகமாம்; பார்வதம் வன்னியபாவ வியாப் பிய தூமமுடையதும், வன்னியபாவ வியாப்பிய பாஷாணமயத் தன்மையுடையதுமெனை இருவகைப் பராமரிசம் உளதேல், ஒன்றினாலும் அனுமிதி இல்லாமை யால் ஒன்றிற்கொன்று பிரதிபந்தகமாதலான்.

8. 4. அசித்தம்:- பராமரிசப் பிரதிபந்தக ஞானவிஷய தர்மம் அசித்தி. அதனையுடையது அசித்தம். அது ஆசிரயாசித்தம் (சார்பசித்தம்), சொரூபாசித்தம் (உருவசித்தம்) வியாப்பியத் தன்மை அசித்தமென மூன்று வகைப்படும்.

3. 4. 1. ஆசிரயாசித்தம்:- பக்கத்தன்மை அவச்சே தகா பலமுடைய (பக்கத்தன்மையை வரையும் தர்ம மின்றிய) பக்கத்தினை உடையது ஆசிரயாசித்தம். ''அது ஆகாயத் தாமரை மணமுடைத்து, தாமரைத் தன்மை யால் – பொய்கைத் தாமரைபோலும்'' எனவரும். ஈண்டு அரவிந்தமாகிய (நறுமணமாகிய) பக்கத்தில் ஆகாயத்திருக்கும் தாமரையில் இல்லையாதலால் அர விந்தத் தன்மையாகிய ஏது ஆசிரயாசித்தமாம். இவ் வுணர்வு பராமரிசப் பிரதிபந்தகமாம்; அரவிந்தத்து ஆகாயத்திருக்கும் தன்மை இல்லை என்று உணர்ந்துழி, மணத்தன்மை வியாப்பிய அரவிந்தத் தன்மை உடை யது. ககனாரவிந்தமா மென்னும் பராமரிசம் சம்பவியா மையால், இது அரவிந்தத்தில் ஆகாயத்திருக்கும் தன் மையின் சம்பந்தத்தைக் கவர்வதாயிருத்தலின்.

9. 4. 2, சொரூபாசித்தம்:- பக்கத்திலிருக்கும் அபா வப் பிரதியோகி சொரூபாசித்தமாம். அது ''மடு திரவியம்; புகையுடைமையால்'' என்பதாம், ஈண்டு பக்கமாகிய மடுவில் தூமத்தின் அபாவமிருத்தலான்,

தூமமாகிய ஏது சொரூபாசித்தம். இவ்வுணர்வும் பராமரிசப் பிரதிபந்தமாம்; மடுவில் தூமமில்லை என்று உணர்ந்துழித் திரவியத்தன்மை வியாப்பிய தூமமுடையது மடுவெனும் பராமரிசம் சம்பவியாமையான்; இது மடுவில் தூம சம்பந்த உணர்வாயிருத்தலின்.

8. 4. 3. வியாப்பியத்துவாசித்தம்:- வியாப்பியத்துவ அவச்சேதகாபாவமுடைய ஏது வியாப்பியத்துவாசித்தம். அது "மலை தீயுடைத்து, பொன்மயமான புகையுடைமையால்" என வரும். ஈண்டு தூமத்தில் வியாப்பியத்துவ அவச்சேதகத் தன்மையாகக் கருதப்பட்ட பொன்மயத்தன்மையில்லை ஆதலால் தூமமாகிய ஏது வியாப்பியத்துவாசித்தமாகும். இவ்வுணர்வும் பராமரிசப் பிரதிபந்தகமாம். தூமத்தில் பொன்மயத் தன்மையில்லை என்று உணர்ந்துழி வன்னிவியாப்பிய பொன்மயத் தூமமுடையது மலை எனும் பராமரிசம் சம்பவியாமையான், இது தூமத்தில் காஞ்சன் (பொன்) மயத்தன்மையின் சம்பந்த முணர்வதாயிருத்தலின்.

8. 5 பாதிதம்:- சாத்தியாபாவமுடைய பக்கத்தை உடையது பாதிதம். அது "நெருப்பு சூடில்லாதது, பதார்த்தத் தன்மையால் — ஜலம்போல்" என வரும். ஈண்டு வன்னியாகிய பக்கத்தில் சூடின்மையின் அபாவமாகிய உஷ்ணத்தன்மை தொக்கிந்திரியத்தால் நிச்சயிக்கப்படுதலால் பதார்த்தத் தன்மையாகிய ஏது பாதிதம். இவ்வுணர்வு சாக்ஷாத் (நேரே) அனுமிதிக்குப் பிரதிபந்தகமாம். வன்னியில் உஷ்ணமின்மை இல்லையென்று உணர்ந்துழி, நெருப்பு சூடில்லாதது என்னும் அனுமிதி சம்பவியாமையான், அதனபாவத்தின் இலௌகிகநிர்ணயம் அதையுடைமை ஞானத்தில் பிரதிபந்தகமாய் இருத்தலின்..

8. 6 உபாதி:- உபாதியும் ஏதுவிற்குத் தோஷமாதலால் சோபாதிக ஏதுப் போலியுமுளதாக; ஐந்தே என்பது என்னையெனில், அற்றன்று; வியபிசார

ஞானத்தைப்போல உபாதிஞானத்திற்கு அனுமிதியும் அதன் காரணமும் ஆகிய இரண்டிலொன்றைப் பிரதிபந்திக்கும் தன்மையின்மையால், உபாதி ஏதுவிற்குத் தோஷமாதலின்மையான்.

சாத்தியத்தில் வியாபித்துச் சாதனத்தில் வியாபியாதது உபாதி (செயற்கை) "மலை புகையுடைத்து, தீயுடைமையால்" என்புழி ஈரவிறகு (ஈரவிறகின் சையோகம்) உபாதி. அது சாத்தியமாகிய தூமத்தின் வியாபகமுமாம்; யாண்டு யாண்டுத் தூமம், ஆண்டாண்டு ஈரவிறகு (ஈரவிறகின் சையோகமு) ளதென்பதுண்மையான்.

சாதனமாகிய வன்னியின் அவ்வியாபகமுமாம்; யாண்டு வன்னி ஆண்டு ஈரவிறகு (ஈரவிறகின் சையோகம் உளதென்ப தின்மையான். ஒழுகக் காச்சிய இரும்புத் துண்டில் வன்னியிருக்கினும் (ஈரவிறகின் சையோகம்) இன்மையான். இங்ஙனமே "யாகத்திற் செய்யும் பசுக்கொலை அதர்ம சாதனமாம் – கொலைமையான். யாகத்திற்குப் புறம்பான கொலையைப்போல" என்புழி நிஷித்தத்தன்மை உபாதி. அவ்வதர்மசாதனமாகியசாத்தியத்தின் வியாபகம் உண்டாகிறது; யாண்டு யாண்டு அதர்ம சாதனத்துவம் ஆண்டாண்டு நிஷித்தத்துவம் என்றிருத்தலான். சாதனத் தன்மையாகிய கொலைமையின் அவ்வியாபகம் உண்டாகிறது; யாண்டு யாண்டு கொலைமை ஆண்டாண்டு நிஷிதத்துவமென்பது இன்மையின்; பக்கமாக்கப்பட்ட கொலையிற் கொலைமையிருக்கினும் நிஷேதிக்கப்படுந் தன்மையின்மையான். இவ்வாறு "கர்ப்பத்திலுள்ள சூரிய புத்திரன் கரியன்; சூரிய புத்திரத் தன்மையில் காணப்படுகிற சூரிய புத்திரர் அறுவரைப் போல்" (சனி, இயமன், யமுனை, வருணன், சுக்கிரீவன் கர்ணன்) என்புழி சாகபாகங்களாலாகிய தன்மை உபாதியாம். கருமை காகமுத

லியவற்றில் இருக்குங்கால் சாகபாகங்களாலாகிய தன் மையின்மையான் சாத்தியவியாபகம் ஆகாதென்ப தில்லை; காக முதலியவற்றின் கணில்லாத கருமையே ஈண்டு சாத்தியமாகலின்.

9. உவமானம்:- உவமிதியறிவிற்குக் காரணம் உவமா னம்; அதுவும் சாதிருசிய ஞான (ஒப்புமையறிவு) வடி வினது உவமிதித் தன்மையாகிய சாதியுடையது உவ மிதி. இஃது எங்ஙனமுண்டாகிறதெனில், உரைக்கப் படுகிறது:- கவயம் (ஆமா - காட்டுப்பசு) இதுவென அறியாத நகரத்தான் ஓர் வனசரனைப் பார்த்து, கவய மெனும் சொற்பொருள் எத்தகையதெனக் கேட்க, அவன் ஆவினையொக்கும் ஆமா எனும் சொற்பொருள் என்று இயம்பக் கேட்ட அவன், ஓர்கால் வனத்தை யடைந்து ஆவை ஒத்த பிண்டத்தைக் காண்புழி முற் கூறப்பட்ட அதிதேச வாக்கியார்த்தத்தைச் (ஆவினை ஒக்கும் ஆமா எனும் சொற்பொருள் என்பதை அதி தேச வாக்கியம் என்பர்) சிந்தித்து, இது கவயம் எனும் சொற்பொருளாம் என அறிகிறான். அது உவ மிதி. ஈண்டு ஆவொப்புமை அறிவு கரணம் அதிதேச வாக்கியார்த்த ஸ்மரணம் வியாபாரம்.

10. சத்தம்:- சப்தப் பிரமாகரண ஞான விஷயம் சத்தம். உ-ம்: ஆற்றங் கரையில் ஐந்து பழங்கள் உள என்ற வாக்கியார்த்த கோசரமான யதார்த்தஞானம் சப்தபிரமா. ஈண்டு பதஞானம் கரணம்; பதத்தினு லாகிய பதார்த்த உணர்ச்சி வியாபாரம். பதத்தால் அறியப்படுதற்கு ஒன்றிற்கொன்று உள்ள சம்சர்க்கம் (சம்பந்தம்) வாக்கியார்த்தம். பத சமூகம் (பதங்களின் கூட்டம்) வாக்கியம் அர்த்தவாசகம் பதம். அது முக் கியம் கௌணம் என இருவகைப்படும்.

10 1 முக்கியம்:- எது சக்திவிருத்தியால் எந்தப் பொருளை அறிவிக்கிறதோ அது அப்பொருளில் முக்

கியமாம். அது குதிரை, குடம் முதலிய வியக்தியை அறிவிப்பது. குதிரை, குட முதலிய பதமாதல் போல வாம்.

10. 2 கௌணம்:- இச் சொல்லால் இப்பொருள் உணரத்தக்கது எனும் வடிவினதாகிய அருதி சங்கேதம் சக்தி. எது இலக்கண விருத்தியால் எப்பொருளை அறிவிக்கிறதோ, அது அப்பொருளில் கௌணமாகிய இலாக்ஷணிகம் எனப்படுகிறது. அது கங்கையிலிடைச் சேரி என்புழி கங்கை எனும் சொல் கரையை அறிவிப்பதாதல் போலவாம். சக்கிய சம்பந்தம் இலக்ஷணை (சக்கியம் சக்தி விருத்தியாலறியப்படும். பதப்பொருள்). கங்கை எனும் பதத்தின் சக்கியமாகிய பிரவகிக்கும் (ஓடும்) நீர்த்தொகுதிக்குக் கரையிலுள்ள சையோக சம்பந்தம், கங்கை எனும் பதத்தின் இலக்கணமாம். அச்சத்தத்திற்கு ஆகாங்க்ஷை (அவாய்நிலை( யோக்கியதை (தகுதி, சந்நிதி, அண்மை) என்பவை சககாரிகளாம்.

10. 3 அவாய்நிலை:- எப்பதத்திற்கு எப்பதமின்றி அன்னுவயாநுபவத்தை (பொருள் கோளுணர்ச்சியை) உண்டாக்கும் தன்மையில்லையோ, அப்பதத்திற்கு அப்பதத்தோடு (செவ்வையாய் உச்சரிக்கப்படுகின்றமையால்) அவாய்நிலையாம். குடத்தைக் கொண்டுவா என்றல் முதலியவற்றிற் காரகபதத்திற்குக் (காரகமெனல் விளிகுறை இரண்டையும் விட்ட வேற்றுமைகள், வினையான் முடியிற் காரகமெனப்படும்) கிரியாபதம் (வினைச்சொல்) இன்றிக் குடம் செயப்படுபொருளாமெனும் அந்நுவயாநுபவத்தையும் உண்டாக்கும் தன்மையின்மையால், காரகபதத்திற்குக் கிரியாபதத்துடன் அவாய்நிலையாம். இவ்வாறே கிரியாபதத்திற்குக் காரகபதத்துடனும் (அவாய்நிலை) அறியத் தக்கதாம்.

ஆகையானே "ஆ, குதிரை, புருஷன், யானை" என் பனவற்றுள் அவாய்நிலை இன்மையால் அன்னுவய உணர்வின்று.

10. 4 தகுதி:- ஒரு பதார்த்தத்திலுள்ள மற்றோர் பதார்த்தத்தின் சம்பந்தம் தகுதி. ஜலத்தாற் தெளிக் கிறான் என்பதில் ஜலமென்னும் பதார்த்தத்தின் காரண காரியத் தன்மையின் இலக்கணமாகிய தெளித்தலின் சேர்க்கையிருத்தலால் தகுதியாம். "தீயாற் தெளிக்கி றான்" என்பதில் அன்னுவய போதமில்லை; தகுதியின் மையான்.

10. 5 சந்நிதி:- பதங்களின் மறைப்பின்மை சந்நிதி. "ஆவைக் கொணு" என்பதில் பதங்களை யிடையின்றி உச்சரித்தலால் சந்நிதி (அண்மை) யாம். எனவே யாமத்திற் கொவ்வொன்றாகத் தனித்தனியே உச்ச ரிக்கப்படும் ஆவைக்கொணு வென்றன் முதலியவற்றில் அன்னுவய பேதமில்லை; சந்நிதி இன்மையான்.

10. 6 மூவகைச் சத்தம்:- விதி, நிஷேதம், அர்த்தா வாதம் என சத்தம் மூவகைப்படும்.

10. 6. 1. விதி:- பிரவிருத்தி பரமான வாக்கியம் விதி. உ + ம்:- ஜோதிஷ்டோமத்தால் சுவர்க்க காமன் யஜிக்கக்கடவன், ஒதன காமன் தண்டுலத்தை (அரிசி யை)ப் பாகஞ் செய்யக் கடவன்". ஜோதிஸ்டோமம் எனும் யாகம் சுவர்க்கரூப இஷ்ட சாதனமும், தண்டு லகர்மமான பாகம் ஒதனரூப இஷ்டசாதனமுமாமென் பது உபயவாக்கியார்த்தமாம். "யஜிக்கக் கடவன்", "பாகஞ் செய்யக் கடவன்" என்றன் முதலிய விதிப் பிரத்தியத்தான் (உணர்ச்சியான்) இஷ்டசாதனத் தன்மை அடையப்படுதலான்.

10. 6. 2 நிஷேதம்:- நிவர்த்திபரமான வாக்கியம் நிஷேதம். அது "கலஞ்சம் (கஞ்சா) தின்னலாகாது

என்பதாம். கலஞ்சபக்ஷணம் இஷ்ட விசேஷ சாதன மன்றென்பது பொருள். இஷ்ட விசேஷமும் ஈண்டு பாவத்தை உண்டு பண்ணுமையேயாம்; அங்ஙனமே வாக்கிய தாற்பரியம் இருத்தலால்.

10. 6. 3 அர்த்தவாதம்:- விதிநிஷேதங்களுக்கு வேருய சத்தம் அர்த்தவாதமாம். அவை "யாககம்பம் ஆதித் தன், அக்கினி பனிக்கு மருந்து, வச்சிர ஹஸ்தன் புரந்தரன்" என்று தொடக்கத்தன. அச்சத்தம் உலகத் திலும் வேதத்திலும் சமமாம். (அவ்விரண்டிற்கும்) இத்துணையே விசேஷமாம்: இலௌகீக வாக்கியத்துள் ஆப்தனுற் சொல்லப்பட்ட சிலவே பிரமாணமாம். பரமாப்தனுகிய பகவானுற் செய்யப்பட்டமையான் என்பது விசேஷம்.

11. பிரமாணந்தரமின்மை:- அர்த்தாபத்தியோ வேறு பிரமாணமன்று. பருத்திருக்கும் தேவதத்தன் பகலுண் ணுன் என்று காணுமிடத்தாதல், கேட்குமிடத்தாதல் பகலுண்ணுதவனுக்கு இரவுணவு இன்றி பருமன் சம்பவி யாது என உணர்ந்தபின், தேவதத்தன் இரவில் (கரந்து) உண்பானேன்று நிச்சயிக்கப்படுகிறது. அது வெதிரேக சாத்தியமாதலின். அதாவது தேவதத்தன் இரவிலுண்பான்; பகலுண்ணுதிருக்கப் பருத்திருத்த லான். எவன் இரவில் உண்ணவில்லையோ, அவன் பகலுண்ணுதிருக்கிற் பருமன் உண்டாகாது; பகலும் இரவும் உண்ணுதவன் போல எனவரும். அர்த்தா பத்தி என்பது வெதிரேகிக்கே மற்ருேர் பெயராம். குடத்தை உணர்த்துழிக் குடத்தின் அபாவம் கிரகிக் கப்படாமையான், பிரதியோகி உணர்ச்சியின்மை அபா வத்தைக் கிரகித்தலிற் பிரத்தியட்சத்திற்கே சகாரி யாம்; வேறு பிரமாணமன்று, பிரத்தியட்சமாத்திரத் தான் அபாவத்தைக் கிரகித்தல் பொருந்துதலான். அன்றிறனிற் குடமில்லையென்று நிர்ணயித்த பின்னர் ஈண்டு குடத்தின் அபாவத்தை சாக்ஷாத்கரிக்கின்றேன் என்னும் தோற்றம் சம்பவியாமையான்.

12. பிராமாணிய வாதம்:- பிராமாணியம் (ஞானம் பிரமாணமாதல்) தானே கிரகிக்கப்படுகிறதா, அல்லது பிறிதொன்றாற் கொள்ளப்படுகிறதா என விசாரிக்கப் படுகிறது. தூரத்தினின்று பிரத்தியட்சத்தான் ஜல முதலியவற்றின் உணர்வு பிறந்துழி, ஆண்டு தானே யதார்த்த ஞானத்தன்மை வடிவினதாய பிரமாணி யத்தை நிச்சயித்து, ஜல விருப்புடையோன் பிரவர்த் திக்கிறான். ஞானத்தைக் கவரும் கால், பிராமாணி யத்திற்கு ஞானமுழுவதையுங் கிரகிப்பது கிரகிக்கப்படு வதென்னுந் தன்மை வடிவமாகிய தானேயாந் தன்மை சம்பவித்தலால் என்பர் மீமாம்ஸகர். அஃதில்லை தானே பிராமாணியத்தைக் கிரகிக்குமிடத்து ஞானத்தை கிரகித்தபின் ஓரிடத்து எனக்குண்டா கிய ஜலஞானம் பிரமையா, அல்லவா என்னும் பிராமாணிய சம்சயமுண்டாக லாகாது. நிச்சயிக்கப் பட்டதில் சம்சயம் பொருந்தாமையான். சம்சயஸ்தலத் தில் ஞானத்தைக் கிரகித்தலுமில்லை எனலாகாது. ஞானத்தைக் கவராத காலத்து ஞான தர்மியையுடைய பிரமாணியமும் அதன் அபாவமுமாகிய இரண்டிலும் சம்சயம் சம்பவியாமையால் சம்சயத்தில் தர்மிஞானம் ஏதுவாயிருத்தலின். முன்னிற்பதாயதோர் உயரமுள்ள தர்மியை அறியாத காலத்து ''இதுகட்டையா'', புருடனா என்னும் சம்சயமுண்டாகாது; ஆதலால் ஞானத்தின் பிறிதொன்றான் பிராமாணியம் நிச்சயிக் கப்படுகிறது. அங்ஙனமன்றே, அப்பியாசமின்றிய தசை யிற் கிடைத்த நீர் முதலியவற்றின் ஞானமுண்டாய காலத்து, ஆண்டுப் பிராமாணிய சம்சயமிருந்தும் புரு ஷன் பிரவர்த்திக் (முயன்று சொல்லு) கிறான். அதன் பின் ஜலத்தையடைந்த காலத்து எனக்குண்டாயிருந்த ஜலஞானம் பிரமையாம் (உண்மையனுபவமாம்). முயன்று சென்றது பயன்படச் செய்தலின். யாது பிரமையன்றோ, அது பயன்படும் பிரவிருத்தியை உண்டு பண்ணுவதாகாது. ஜலப்பிரமம் (மயக்கம்) போல வெனும் வெதிரேகத்தான் அப்பியாசமின்றிய காலத்

துக் கிடைத்த ஞானத்தின் பிராமாணியம் நிச்சயிக்கப்படுகிறது. அப்பியாச தசையிற் கிடைத்த ஜலமுதலியவற்றின் ஞானங்களின் பிரவிருத்திக்கு முன்னும் அனுமானத்தால் பிராமாணியம் நிச்சயிக்கப்படுகிறது. ஆண்டே இரண்டாவது முதலிய ஜலஞானம் பிரமை; பயனுடைப் பிரவிருத்தியை உண்டுபண்ணும் ஜாதியுடைமையான்; முதல் ஜலஞானத்தைப் போல என்பதனுன்.

13. குணநிருபணம்

13. 1 சுகம்:- (யான் சுகியெனும் அனுபவத்திற்கு விஷயமாங் குணமாய்) தர்மத்திலுண்டாவது சுகம்.

13. 2. துக்கம்:- (யான் துக்கியெனும் அனுபவத்திற்கு விஷயமாங் குணமாய்) அதர்மத்திலுண்டாவது துக்கம்.

13. 3. இச்சை:- இச்சைத் தன்மையாகிய சாமானியமுடையது இச்சை. அதுவும் பயனாகிய விஷயமுடையதென்றும், சாதன விஷயமுடையதென்றும் இருவகை. சுகமும், துக்கமின்மையும் பயனாம். அதன் இச்சையைக் குறித்துப் பயனுணர்ச்சி மாத்திரம் காரணம். சாதன இச்சையைக் குறித்துப் பயனுக்கேதுவாந் தன்மையுணர்ச்சி காரணம்.

13. 4. துவேஷம்:- துவேஷத் தன்மையாகிய பொதுவியல்புடையதாதல், அனல்வடிவினதாதல் துவேஷம். அது துக்கவிஷயம், சாதன விஷயம் என இருவகைப்படும். துக்கத் துவேஷத்தைக் குறித்து துக்கஞானமாத்திரம் காரணம். சாதன துவேஷத்தைக் குறித்துத் துக்க சாதனத் தன்மையின் ஞானம் காரணம் (துக்க முதலிய துவேஷிக்கப்படும் பொருளுக்குச் சாதன வடிவாயுள்ள சேதன வஸ்துவை விடயஞ் செய்யும் துவேஷம் குரோதமெனப்படும்).

13. 5. பிரயத்தனம்:- பிரயத்தனத் தன்மையாகிய பொதுவியல்புடையதாதல், உற்சாகவடிவினதாதல், பிரயத்தனம். அது பிரவிருத்தி, நிவர்த்தி, ஜீவன யோனி எனும் வேறுபாட்டால் மூவகைப்படும்.

13. 5. 1. பிரவிருத்தி:- செய்யும் விருப்ப (இராக)த்தாற் தோன்றிய முயற்சி பிரவிருத்தி.

13. 5. 2. நிவர்த்தி:- துவேஷ சாதனத் தன்மையின் ஞானத்தாற் தோன்றிய முயர்ச்சி நிவர்த்தி.

13. 5. 3. ஜீவனயோனி:- சுவாசப் பிரசுவாசங்களுக்கு ஏதுவான முயற்சி ஜீவன யோனியாம். அதுவும் அதீந்திரியமாம். புத்தி, இச்சை, பிரயத்தனமென்பவை ஆன்மா மாத்திரத்திற் சமவேதித்துள்ளனவாம். அவற்றுள் ஈசுவரனிடத்திலுள்ளது நித்தியமும், ஜீவனிடத்திலுள்ளது அனித்தியமுமாம்.

13. 5. 4. குருத்துவம்:- ஆதியில் வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம் குருத்துவம். அதுவும் பூமி ஜலங்களின் மாத்திரமிருப்பது.

13. 6. திரவத்துவம்:- ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயி காரணம் திரவத்துவம். அது சாம்சித்திகம் (இயல்பாயுள்ளது) நைமித்தியம் (நிமித்தத்தாலுள்ளது) என இருவகைப்படும்.

13. 6. 1. சாம்சித்திகம்:- அக்கினி சையோகத்தை அபேஷியாத திரவத்துவம் சாம்சித்திகம். அது ஜலத்தில் மாத்திரமிருப்பது.

13. 6. 2. நைமித்திகம்:- அக்கினி சையோகத்தை அபேஷித்த திரவத்துவம் நைமித்திகம். அது நெய் முதலிய வடிவினதாய பூமி, பொன் முதலிய வடிவினதாய தேயுவெனும் அவ்விரண்டிடத்துமேயாம். நெருப்பின் கூட்டத்தால் திரவத்துவம் உண்டாதலால்;

13. 7. சினேகம்!- சினேகத் தன்மையாகிய சாதியு டைய வடிவினது சினேகம். அதுவும் ஜலமாத் திரத்திலிருப்பது. கடலைப்பொடி முதலியவற்றைத் திரட்டுவது நெய், எண்ணெய் முதலியவற்றிலுள்ள சினேகவுணர்வு ஜல உபாதியினையுடையது. குருத்துவ திரவத்துவ சிநேகமென்பவை அணுவிலுள்ள நித்திய மும், காரியத்திலுள்ள அனித்தியமுமாம்.

13. 8. வாசனை:- வாசனைத் தன்மையாகிய சாதி யுடையது வாசனை. அது வேகமும், நிலைபெறுத்துகை யும், பாவனையும் என மூவகைப்படும்.

13 8 1. வேகம்:- வேகத் தன்மையாகிய சாதியு டையது வேகம். அது மூர்த்தத் திரவியத்தின் மாத் திரம் சமவேதித்திருப்பது.

13. 8. 2. நிலைபெறுகை:- ஆசிரயத்தின் முன்னிலை யைச் சம்பாதிக்கும் வாசனை நிலைபெறுகை. அது பிருதுவி முதலிய நான்கினிருப்பது. வளைக்கப்பட்ட மரக்கிளை மீண்டும் அவ்விடத்து (முன்னிருந்தவிடத்து) நிலைத்தலை உண்டு பண்ணுகிறது. இவ்விரண்டும் கிரியையினாற் பெறப்படுவனவும், தம்மிற் தோன்றிய கிரியையினால் அறியத்தக்கனுமாகும்.

13. 8. 3 பாவனை:- முன்னனுபவத்தாற் தோன்றி ஸ்மி ருதிக்கு ஏதுவாம் சம்ஸ்காரம் பாவனை. அது ஜீவன் மாத்திரத்திலிருப்பது. மூவகைச் சம்ஸ்காரமும் அனித் தியமாம்.

13. 9. தருமம் / அதருமம்:- விதிவினையாற் சாதிக்கப் படுவது தருமம். விலக்கு வினையாற் சாதிக்கப்படுவது அதருமம். இவ்விரண்டும் ஜீவன் மாத்திரத்திற் சம வேதித்துள்ளனவும்; போகம், பிராயச்சித்தம் முதலிய வற்றால் நசிக்கத்தக்கனவுமாகும்.

13. 10. சத்தம்:- செவியாற் கவரப்படும் குணம் சத்தம். அது சையோகம் (கூட்டத்தாற் பிறந்தது),

விபாகஜம் (பிரிவாற் பிறந்தது), சப்தஜம் (ஓசையாற் பிறந்தது என மூவகைப்படும்

13. 10. 1. சையோகம்:- அடிக்கப்படும் பேரியினு லுண்டாகும் சத்தமெதுவோ அது சையோகம் ஆண்டு பேரிக்கும் ஆகாயத்திற்கும் உள்ள சையோகம் அசம வாயி காரணம், பேரிக்கும் தண்டத்திற்கும் உள்ள சையோகம் நிமித்தகாரணம்.

13. 10 2. விபாகஜம்:- பிளவுபடும் மூங்கிலில் உண் டாகும் சடசடவோசை விபாகஜம். ஆங்கு மூங்கிற் பிளவிரண்டிற்கும் ஆகாயத்திற்குமுள்ள விபாகம் அசம வாயி காரணம். மூங்கிற் பிளவிரண்டின் பிரிவு நிமித்த காரணம்.

13. 10. 3. சத்தஜம்:- விசிதரங்க நியாயத்தானே னும் (சமுத்திர ஜலத்தில் ஓர் அலையின் நுனிப்பாகத் தில் மற்றோர் அலை எழும்புகிறது. அவ்வலையின் நுனிப் பாகத்தில் மற்றோரலை எழும்புகிறது. இவ்வாறே பல வேறு திக்குக்களிலும் அவ்வலைகளின் பரம்பரையின் பிரவாகம் போய்க்கொண்டேயிருக்கும். அதுபோல முதற்சத்தத்திலிருந்து இரண்டாவதும், இரண்டாவதி லிருந்து மூன்றாவதுமாக முன்முன் சத்தங்களிலிருந்து பின்பின் சத்தங்களின் உட்பத்தி பல திக்குகளிலும் உண்டாகிக் கொண்டிருக்கும். இது விசிதரங்க நியா யம்). கதம்ப கோளக நியாயத்தானேனும் (கதம்ப கோளகத்தின் நடுவிலிருந்து எல்லாத் திக்குகளையும் நோக்கி இதழ்கள் எழுகின்றன. அதுபோல எந்த நடு விடத்தில் முதற் சத்தமுண்டாகிறதோ அதிலிருந்து கிழக்கு முதலிய பத்துத் திக்குகளிலும் பத்து சத்தங் களுண்டாகி அப் பத்திலிருந்தும் வேறு பத்து சத்தங் களுண்டாகும். இவ்வாறு முன்முன் சத்தங்களிலிருந்து பின்பின் சத்தங்களுண்டாகின்றன. இது கதம்ப கோளக நியாயம்.) உண்டாகும். இரண்டாவது முத லிய சத்தங்கள் எவையோ அவை சத்தஜங்களாகும் (சத்தத்தாற் தோன்றியவைகளாகும்). ஆண்டு பின்பின்

சத்தத்தில் முன்முன் சத்தம் அசமவாயி காரணமாம். அனுகூலமான காற்று முதலியன நிமித்த காரணம்; சத்தம் எழுத்துவடிவம், ஒலிவடிவம் என இருவகைப் படும்;

13. 10. 3. 1 எழுத்துவடிவம்:- அன்ன முதலியவற் றின் வியாபாரத்திற் தோன்றுவது எழுத்து வடிவம்.

13. 10. 3. 2 ஒலிவடிவம்:- மிருதங்கமுதலியவற்றுத் தோன்றுவது ஒலிவடிவம். எல்லாச் சத்தங்களும் ஆகாய மாத்திரத்திற் சமவேதித்திருப்பனவாம், ஜீவாத்மாவைச் சமவேதித்திருக்கும் புத்தி, சுகம். இச்சை, துவேஷம், முயற்சி என்பவைகளும், சத்தமும் இரண்டு கணம் நிற்பனவாய் மூன்றுவது கணத்தில் நசிகின்றன. விபுத்திரவியங்களின் யோக்கிய விசேஷ குணங்களுக்குத் தமது இரண்டாவது கணத்திற் தோன் றியனவற்றால் (தமக்கடுத்த கணத்திற் தோன்றித் தம் மோடு ஒருங்கு நிற்கும் விபயோக்கிய விசேஷ குணங் களால்) நாசமுண்டாதல் நியமமாதலின்.

14. கர்மம்:- மேலிடங் கூடுதற்கேதுவான கர்மம் எழும்பல். கீழிடம் கூடுதற்கேதுவான கர்மம் விழ்தல். தன் சமீபத்திற் கூடுதற்கேதுவான கர்மம் வளைதல். தன்னிற் தூரத்திற் கூடுதற்கேதுவான கர்மம் நிமிர் தல். ஏனைய எல்லாக் கர்மமும் நடத்தல். ஐவகைக் கர்மமும் மூர்த்தத் திரவியத் தன்மை மாத்திரத்திற் சமவேதித்திருக்கும் அனித்தியமேயாம். பிற் சையோ கத்தாலும் ஓர் காலத்து ஆசிரயம் (தன்சார்பு) நசித் தலானும் அது நசிக்கிறது.

15. சாமானியம்:- மிகப் பரந்திருக்கும் சாமானியம் (சாதி) பரம். அது சாரமெனப்படும். அதிக தேசத் திலிருப்பது, அற்ப (குறுகிய) தேசத்திலிருக்கும் சாமா

னியம் அபரம். அது திரவியத்தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை முதலிய சாராம்சத்தைப் பொறுத் தளவில் அற்பதேசத்திலிருப்பனவாம். சாமானியம் ஜாதி வடிவினது, உபாதி வடிவினது என இருவகைப் படும். நேரடியாகச் சம்பாதிக்கப்பட்ட சாமானியம் ஜாதி வடிவினது. பரம்பரையாகச் சம்பாதிக்கப்பட்ட சாமானியம் உபாதி வடிவினது. பிரமாத் தன்மையே பரம்பரைச் சம்பந்தத்தால் குடம் முதலியவற்றிலிருக் கும்.

17. விசேஷசமவாயங்கள் :- நித்தியத் திரவியங்களில் இருக்கும் விசேஷங்களிற்கும் சமானியத்திற்கும் சிறப் பான பிரிவில்லாததால் மூற்கூறிய சாமானிய இலட் சணமே போதியது. ஆனுல் விசேஷத்தை அங்கீகரிக் காவிடின் இவ்விரண்டும் ஒன்றற்கொன்று வேறு என் னும் புத்தி உண்டாகாது.

18. அபாவம் :- தாதான்மிய சம்பவத்தான் வரைந்து கொள்ளப்பட்ட பிரத்தியோகத் தன்மையுடையது அபாவம். அன்னியோன்நியாபாவ பேதம் எனக் கூறுவர் (ஒன்றிலொன்றின்மையாம்). அன்னியோன் நியா பாவத்திற்கு அன்னியமான அபாவம் சம்சர்க்கா பாவம். அது பிராக அபாவமும், பிரத்தொம்சா அபாவமும், அத்தியந்தாபாவமும் என மூன்று வகையாகும். உற்பத்திக்கு முன் சமவாயி காரணத் திலுள்ள காரியத்தின் சம்சர்க்கா அபாவம் பிராக அபாவமாகும் (முன்னின்மையாம்). உட்பத்திக்குப் பின் சமவாயி காரணத்திலுள்ள காரியத்தின் சம்சர்க்கா பாவம் பிரத்தொம்சா அபாவமாம் (அழிவுபாட் டின்மை, பின்னின்மை எனவும் பெயர் பெறும்). மூன்று காலத்திலும் உள்ள சம்சர்க்கா அபாவம் அத்தி யந்தா அபாவமாகும் (முழுவதுமின்மையாகும்).

19. அவ்வியாப்தி:- இலக்ஷண தோஷங்களாகிய அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் என்பவை ஏதுப்போலியிலடங்கும். இலக்கியத்தின் ஏகதேச இலக்கணம் இல்லாதிருப்பது அவ்வியாப்தி. அது சிகை சூத்திரமுடையவன் பிராமணன் என்பதற்குச் சந்நியாசியினிடத்து அவ்வியாப்தியாம். இலக்கியம் அல்லாததற்கு இலக்கணம் சொல்லுதல் அதிவியாப்தி. அது மனிதன் பிராமணன் என்னும் இலக்கணத்திற்குச் சூத்திரனிடத்து அதிவியாப்தியாம். இலக்கிய முழுவதினும் இலக்கணமில்லாதிருப்பது அசம்பவம். அது துதிக்கையுடையவன் பிராமணன் எனும் இலக்கணம் அசம்பவமாம்; எப்பிராமணனுக்கும் துதிக்கையின்மையான் என்பதாகும். இம்மூன்று குற்றமும் இன்மையே இலக்கணம். அது "புனிதமுள்ள மாதா பிதாக்களாற் பெறப்படும் தன்மையுடையவன் பிராமணன்" என்பதாம்; அது புனிதத் தன்மையும் அறுதொழில் அதிகாரமுடைமையாகும்.

20. முடிவுரை:- இதுவரை எல்லாப்பதார்த்தங்களுக்கும் உத்தேசமும், இலக்கணமுங் கூறப்பட்டன. இலக்கியத் தன்மையை வரைந்து கொள்ளுதல் மாத்திரத்தான் இலக்கியத்தைக் கீர்த்தித்தல் உத்தேசம். அசாதாரண தர்மம் (சிறப்பியல்பு) இலக்கணம். உத்தேச இலக்கணங்களின் பொருத்தம் பொருத்தமின்மையை ஆராயும் பயனையுடைய விசாரம் பரீட்சை. பரீட்சை இலதேல் இப்பதார்த்த நிரூபணம் நிஷ்பிரயோஜனமாம். பதார்த்தங்களின் தத்துவஞானம் ஆன்ம தத்துவஞான வாயிலாக மோக்ஷசாதனமாகும்.

தருக்க கௌமுதி முற்றும்

## கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அக்கியாதி | – | Non-apprehension |
| அசாதனாங்க வசனம் | – | Improper reason |
| அசித்தம் | – | Unproved<br>An - established reason |
| அசித்தம் | – | Absence of proof |
| அதிகரணம் | – | Hypothetical dogma<br>Cases for settlement |
| அதிக்கிரந்தாவேட்சணம் | - | Retrospection |
| அதிதேசம் | – | Extended application |
| அதிவியாப்தி | – | Being too wide<br>Over - applicability |
| அதீத காலம் | – | Mistimed |
| அதீத வாக்கியம் | – | Irrelevant talk |
| அத்யந்தாபாவம் | – | Absolute negation |
| அநத்தியவசாயம் | – | Uncertainty |
| அநநுபாஷணம் | – | Silence |
| அநவத்தை | – | Endless regression; |
| அநாகதவேட்சணம் | – | Anticipation |
| அநுபசம்மாரி | – | Non - conclusive reason |
| அநுபலப்தி | – | Imperceptible |
| அநுமதம் | – | Assent |
| அநுமாநாபாசம் | – | Semblance of inference |
| அநுமிதி | – | Inferential knowledge |
| அநுமேயம் | – | Inferred |
| அநுயோகம் | – | Interrogation |
| அநுயோஜ்யம் | – | Censurable |
| அநுவாதம் | – | Repetition |
| அனைகாந்திகம் | – | Uncertain, Erratic |
| அந்நுவயம் | – | Affirmation |
| அந்நுவய வெதிரேகி | – | Affirmative - negative inference |
| அந்நுவயி | – | Exclusively affirmative |
| அபசித்தாந்தம் | – | Deviating from the tenet |

அபதேசம் – Specification
அபவர்க்கம் – Exception
Final emancipation
அபார்த்தகம் – Incoherent
அபாவம் – Non - existence
அப்பிரதிபத்தி – Not understanding
an argument
அப்பிரமாண்ணியம் – Invalidity
அப்பிரதிபை – Non - ingenuity
அருத்தாந்தரம் – Shifting the topic
அருத்தாபத்தி – Presumption
அவிஞ்ஞாதார்த்தம் – The unintelligible
அவினுபாவம் – Pervasion; Invariable rela-
அவ்வியாப்தி – Partial inapplicability [tion
ஆகமம் – Verbal testimony; Scripture
ஆகாங்க்ஷை – Expectancy
ஆசத்தி – Contiguity
ஆதேசம் – Substitution
ஆந்வீக்ஷிகி – The science of logic
Dialectics
ஆரோபம் – Hypothetical admission
உதாரணம் – Example; Familiar instance
உதாரணாபாசம் – Fallacious example
உத்தரம் – Reply
உத்தரபட்சம் – Rejoinder; Posterior
உத்தேசம் – Enunciation; Enumeration
உபநயம் – Application
Subsumptivec correlation
உபமானம் – Comparison; Analogy
உபமிதி – Comparative knowledge
Assimilative cognition
உபலப்தி – Apprehension
உபந்தியாசோபநயம் – Anecdote used
as an example

| | | |
|---|---|---|
| உபயவிகலம் | - | Defective in both |
| உபாதி | - | Adventitious condition |
| ஊக்யம் | - | Ellipsis |
| ஏது | - | Reason; Proband<br>Middle term |
| ஏதுப்போலி | - | Semblance of reason |
| ஏத்துவந்தரம் | - | Shifting the reason |
| ஏத்துவர்த்தம் | - | Implication |
| ஐதிகம் | - | Tradition; Hearsay |
| காலத்யோபதிஷ்டம் | - | Mistimed; Incompatible |
| கேவலாந்நுவயி | - | Exclusively affirmative |
| சகலம் | - | Perfect |
| சங்கேதம் | - | Signification |
| சந்திக்தம் | - | Doubtful |
| சந்நிதி | - | Proximity |
| சபக்கம், சபட்சம் | - | Homologue<br>Similar instance |
| சமவாயம் | - | Inherence |
| சமுச்சயம் | - | Aggregate |
| சம்பவம் | - | Probability |
| சம்ஸ்காரம் | - | Reminiscent Impression |
| சலம் | - | Dialectic quibbling mainly<br>through equivocation<br>Casuistry |
| சவிகற்பக்காட்சி | - | Determinate perception |
| சவ்வியபிசாரம் | - | Erratic, Straying reason<br>Undistributed middle |
| சற்பிரதிபட்சம் | - | Counter - balance<br>Opposable reason |
| சாதனம் | - | Middle term; Probans |
| சாதனவிகலம் | - | Defective in the middle term |
| சாதனவியாவிருத்தி | - | Example of excluded middle term |
| சாதன்மியம் | - | Homogeneity |

| | |
|---|---|
| சாதி | Futile respondence through parity or disparity; Analogue |
| சாத்தியம் | Probandum; Major term |
| சாமானியம் | Genus; Generality |
| சித்தசாதனம் | Demonstration of what has already been established |
| சித்தாந்தம் | Established conclusion Tenet |
| செற்பம் | Wrangling; Sophistry |
| தந்திரயுக்தி | Scientific argument |
| தருக்கம் | Debate; Indirect argument; Reductio ad absurdum Confutation |
| தருக்காபாசம் | Fallacy of argumentation |
| தாற்பரியம் | Intention |
| திருஷ்டாந்தம் | Familiar instance Typical example |
| நிகமனம் | Conclusion |
| நிக்கிரகம் | Defeat |
| நிக்கிரகத்தானம் | Vulnerable point; Point of defeat |
| நியாயப்பிரயோகம் | Syllogistic expression |
| நியூனம் | Saying too little |
| நியோகம் | Injunction |
| நிரநுயோஜ்யாநுயோகம் | Censuring the non-censurable |
| நிரர்த்தகம் | Meaningless |
| நிருக்தி | Explanation; Commentary |
| நிர்ணயம் | Ascertainment; Decisive knowledge |
| நிர்விகற்பக்காட்சி | Indeterminate perception |
| நிக்ஷேபம் | Imposition |

